بسم الله الرحمن الرحيم

# التعريف بالاسلام (لغة تاميل)

# இஸ்லாம் ஓர் அறிமுகம்

இஸ்லாம் என்பது ஓர் அரபுச் சொல். அதன் கருத்து என்ன என அறிந்து கொள்வது அனைவருக்கும் அவசியம்.

இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு மதமும், ஒன்று: தனிப்பட்ட ஒருவரின் பெயரிலோ அல்லது ஒரு சமூகத்தின் பெயரிலோ அழைக்கப்பட்டு வருவதை நாம் காணமுடிகிறது. கிறிஸ்தவ மதம் ***இயேசு கிறிஸ்துவின்*** பெயரிலும் பௌத்த மதம் மகான் ***புத்தரின்*** பெயரிலும் கொன்பியூஸியஸ் மதம் ***கொன்பியூஸியஸ்*** பெயரிலும் மார்க்சிய வாதம் ***காரல்மார்க்ஸ்*** பெயரிலும் அழைக்கப்பட்டு வருகின்றன. யூத மதம் யூதியா என்ற நாட்டில் ***யஹூதா என்ற கோத்திரத்தில் தோன்றியதால்*** அதற்கு அந்தப் பெயர் வந்தது. அதேபோன்று இந்து மதம் இந்தியாவில் ***இந்து சமூகத்தில்*** தோற்றம் பெற்றதால் அதற்கு அப்பெயர் வந்தது.

எனினும் இஸ்லாம் தனிப்பட்ட ஒருவரின் பெயரிலோ அல்லது ஏதாவதொரு நாடு, சமூகம் என்ற பெயரிலோ தன்னை அறிமுகப்படுத்தவில்லை. இஸ்லாம் இந்தப் பிரபஞ்சத்தின் அதிபதியாகிய அல்லாஹ் மனிதனுக்கு வழங்கிய சத்தியமாகும். அதன் அடிப்படை நோக்கம் முழுமனித சமுதாயமும் இறைவனுக்கு அடிபணிந்து நடக்க வேண்டும் என்பதாகும்.

இஸ்லாம் எனும் அரபிச் சொல்லுக்கு அடிபணிதல், கீழ்ப்படிதல், இணங்கி நடத்தல் போன்ற கருத்துகள் உண்டு. இக்கருத்துகளுக்கு ஏற்ப ஒருவர், இறைவனுக்கு அடிபணிந்து அவன் காட்டித் தந்த வழிமுறைப்படி வாழ்ந்தால் அவர் ஒரு முஸ்லிம் ஆவார்.

இஸ்லாம் என்ற சொல்லில் சமாதானம் என்ற கருத்தும் உண்டு. எனவே எவர் இறைவனுக்கு முழுமையாகக் கட்டுப்பட்டு வாழ்கிறாரோ அவர், இயற்கையாகவே அமைதியை, சமாதானத்தை அடைவார் என்பது இதிலிருந்து விளங்கிக்கொள்ள முடிகிறது.

இஸ்லாம் ஏழாம் நூற்றாண்டில் அரபு நாட்டில் வாழ்ந்த முஹம்மத் நபி (ஸல்) அவர்களால் கொண்டு வரப்பட்ட மார்க்கம் அல்ல. அது அவர்களால் இறுதியாகத் தரப்பட்டது உண்மையே. ஆனால் இஸ்லாம் முதன் முதலில் அருளப்பட்டது, உலகின் முதல் மனிதரும் முதல் இறைத்தூதருமான ஆதம் (அலை) அவர்களுக்குத்தான். அவர்களில் இருந்து ஆரம்பமான மனித வர்க்கத்தில் தோன்றிய எல்லா இறைத் தூதர்களினதும் மார்க்கம் இஸ்லாமே ஆகும்.

அல்லாஹ்வினால் அருளப்பட்ட இந்த மார்க்கத்திற்கு இஸ்லாம் என்று பெயரிட்டது மனிதனல்ல. அது அல்லாஹ்வினால் வைக்கப்பட்ட சிறப்புப் பெயராகும். இது பற்றி அல்குர்ஆன் மிகத்தெளிவாக எடுத்துக் கூறுகிறது:

اَلْيَوْمَ أَكْمَلْتُ لَكُمْ دِيْنَكُمْ وَ أَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِى وَرَضِيْتُ لَكُمُ الْإِسْلَامَ دِيْنًا

“இன்றைய தினம் உங்களுக்காக உங்கள் மார்க்த்தைப் பரிபூரணமாக்கி விட்டேன். மேலும் நான் உங்கள் மீது என் அருட்கொடையை முழுமையாக்கிவிட்டேன். மேலும் இஸ்லாம் மார்க்கத்தை உங் களுக்காகப் பொருந்திக்கொண்டேன்” (அல்குர்ஆன்: 5 :3)

وَمَنْ يَّبْتَغِ غَيْرَ الإِسْلاَمِ دِيْنًا فَلَنْ يُّقْبَلَ مِنْهُ

“இஸ்லாம் அல்லாத (வேறொரு) மதத்தை எவரேனும் விரும்பினால் அது ஒருபோதும் அவரிடம் இருந்து ஒப்புக்கொள்ளப்படமாட்டாது” (அல்குர்ஆன் 3 : 85)

مَا كَانَ اِبْرَاهِيْمُ يَهُوْدِيًّا وَلاَ نَصْرَانِيًّا وَلَكِنْ كَانَ حَنِيْفًا مُسْلِمًا

“இப்றாஹீம் யூதராகவோ கிறிஸ்தவராகவோ இருக்கவில்லை. ஆனால் அவர் (அல்லாஹ்விடம்) முற்றிலும் சரணடைந்த ஒருமனப்பட்ட முஸ்லிமாக இருந்தார்” (அல்குர்ஆன் 3 : 67)

மோஸஸ் எனும் மூஸா நபியவர்கள் வழிநடந்தவர்களையோ அல்லது அவர்களது வழித்தோன்றல்களை விளித்து, உங்கள் மதம் யூத மதமே என்று அல்லாஹ் மொழிந்ததாக பைபிளில் எங்கும் காணப்பட வில்லை. அதேபோன்று இயேசு கிறிஸ்து எனும் ஈஸா நபியின் வழிவந்தவர்களின் மதமே கிறிஸ்தவம் எனவும் பைபிளில் கூறப்படவில்லை.

## இது எத்தகைய இறைவனுக்குச் செய்ய வேண்டிய கடமை எனில் ...!

**முஹம்மத் பின் ஸாலிஹ் உஸைமீன் (ரஹ்)**

فضيلة الشيخ محمد بن صالح العثيمين رحمه الله

முன்பு நீங்கள் எந்த ஒரு குறிப்பிடத்தக்க பொருளாகவும் இல்லாதிருந்தீர்கள்., அத்தகைய ‘இல்லாமையில்’ இருந்து உங்களைப் படைத்தவன் அல்லாஹ்தான்.

மேலும் நீங்கள் உங்கள் அன்னையின் வயிற்றில் மூன்று இருள்களின் உள்ளே சிசுவாக இருந்த போது, உங்களுக்குத் தேவையான உணவையும் உங்கள் வளர்ச்சிக்கான ஊட்டச்சத்தையும் உங்க ளிடம் சேர்த்திட எவருக்கும் எந்த சக்தியும் இல்லாதிருந்த சூழ்நிலையில் உங்களுக்கு உண்ண உணவும் உடல் வளர்ச்சிக்கான ஊட்டச் சத்தும் அளித்து உங்கள் மீது அருள்மாரிப் பொழிந்து வளர்த்துப் பரிபாலித்துக் காத்தவன் அந்த இறைவன்தான்!

நீங்கள் குழந்தையாக இருந்தபோது உங்கள் உணவுக்காக அன்னையின் மார்பகங்களில் பால் சுரக்கச் செய்தவன் அவன்தான். அவற்றில் பால் அருந்தும் வழிகாட்டலையும் உங்கள் உள்ளுணர்வில் ஏற்படுத்தித் தந்தான். பெற்றோர் இருவரையும் - உங்கள் மீது மனம் இரங்கும் வகையில் வசப்படுத்தி னான். இப்படி எத்தனையோ உதவிகளை அளித்து உங்களை ஆற்றல் மிக்கவராக அவன்தான் உருவாக்கினான்.

ஆம், உங்கள் மீது பேரருட்கொடைகளைப் பொழிந்தான். அறிவையும் சிந்திக்கும் ஆற்றலை யும் உங்களுக்கு வழங்கினான். அவற்றிலிருந்து பயன்பெறும் அளவு உங்களைத் தயார் படுத்தவும் செய் தான்!

ஒரு கணம் அவன் தனது கிருபையை உங்களை விட்டும் தடுத்திருந்தால் நீங்கள் என்றோ அழிந் திருப்பீர்கள். ஒரு விநாடி உங்களை விட்டும் தனது அருளை அவன் நிறுத்தியிருந்தால் நீங்கள் உயிர் பெற்றிருக்கவே முடியாது.

இந்த அளவுக்கு அல்லாஹ் உங்கள் மீது அருளும் கிருபையும் பொழிந்திருக்கும் நிலையில், அவனுக்குச் நீங்கள் செய்ய வேண்டிய கடமை இன்னும் அதிக முக்கியத்துவம் பெறுகிறது! ஏனெனில் அவன் உங்களைப் படைத்து, பல தகுதிகளை உடையவராக உங்களைத் தயார் செய்ததற்கும் பல்வேறு உதவிகளை அளித்தற்காகவும் உங்கள் மீது அவன் பெற்றிருக்கும் உரிமையாகும் இது. அந்த இறைவன் நிச்சயமாக உங்களிடம் கைமாறு எதுவும் கேட்கவில்லை. உணவு வாழ்வாதாரம் என எது ஒன்றும் உங்களிடம் அவன் எதிர்பார்க்கவில்லை.

لاَ نَسْئَلُكَ رِزْقًا نَحْنُ نَرْزُقُكَ وَ الْعَاقِبَةُ لِلتَّقْوَى (سورة طه ١٣٢)

ஏதேனும் வாழ்வாதாரம் அளிக்குமாறு நாம் உம்மிடம் கோருவதில்லை. நாமே உமக்கு வாழ்வாதாரம் வழங்கிக் கொண்டிருக்கிறோம். மேலும் நல்ல முடிவு இறையச்சத்திற்கே உள்ளது " (குர்ஆன் அத்தியாயம் 20 வசனம் 132)

உங்களிடமிருந்து அல்லாஹ் நாடுவது ஒன்றே ஒன்றுதான். அதன் நலன்கூட உங்களையே சேரு கிறது. அதுதான் இணைதுணையில்லா ஏக இறைவனாகிய அந்த அல்லாஹ்வை நீங்கள் வணங்க வேண்டும் என்பது!

மேலும் எவ்வாறு இரட்சித்தலின் ஒவ்வொரு அம்சத்துடனும் உங்களுக்கு அவன் இரட்சகனாக இருக்கிறானோ அவ்வாறே அடிபணிதலின் நிறைவான கருத்துக்களுடன் அவனுக்கு நீங்கள் அடிபணிந்திட வேண்டும் என்றுதான் விரும்புகிறான். அவனுக்குக் கீழ்ப்படிந்து, அவனுடைய கட்டளைகளை நிறை வேற்றி, அவன் விலக்கும் தீமைகளை விட்டு விலகி வாழும் நல்ல அடியாராகவும் (வேதங்கள், தூதர்கள் மூலம்) அவன் அறிவிக்கும் செய்திகளை உண்மையென ஏற்கும் நம்பிக்கையாளராகவும் நீங்கள் திகழ்ந்திட வேண்டும் என்றுதான் அவன் விரும்புகிறான்.

## *சிந்தனைக்குரிய சில நிகழ்ச்சிகள்*

## تأثير القرآن فى قلوب الأنام

மெத்தப்படித்த மேதைகள், சிந்தனாவாதிகள், அறிவு ஜீவிகள் எனப்படுவோர்கூட சில நேரம் திருக் குர்ஆனின் ஏதேனும் ஒரு வசனத்தை அல்லது நபிமொழியைப் படித்து இஸ்லாத்தின் பக்கம் ஈர்க்கப் பட்டுவிடுகிறார்கள்.

குர்ஆனின் 39வது அத்தியாயம் 6வது வசனம்: **அவன் உங்கள் அன்னையரின் வயிற்றில் மூன்று இருட்திரைகளின் உள்ளே படைத்தலின் ஒருநிலைக்குப் பின் மறு நிலையாக உங்களுக்கு வடிவம் கொடுக்கிறான்**" - இதனைப் படித்ததும் குர்ஆன் உண்மை வேதம்., இஸ்லாம் சத்தியமானது என்று அறிவித்து இஸ்லாத்தில் இணைந்தார் ஒரு பிரான்ஸ் அறிஞர்.

**ஒட்டகத்தைக் கட்டிப்போடுங்கள்., பிறகு இறைவன் மீது தவக்குல் (முழுச்சார்பு) வையுங்கள்** என்பது நபிமொழி. இந்த அழகிய சிறிய நபிமொழியைக் கேட்டதும் ஒரு அமெரிக்க ராணுவ ஜெனரல் தனது மதத்தை, பதவியை, பட்டத்தை எல்லாவற்றையும் மிகவும் மகிழ்வோடு துறக்கத் தயாராகி விடுகிறார். என்ன சொல்கிறார்?தன்னைப் பின்பற்றுபவர்களைக் கண்மூடித்தனமான மூட நம்பிக்கைகளில் கட்டிப் போடாமல் சீராகச் செயல்படவைக்கும் யதார்த்தமான அணுகுமுறையைக் கையாளுகிற மார்க் கமே சரியான மார்க்கம்" என்று கூறுகிறார்.

இதேபோல ஜப்பானைச் சேர்ந்த ஒரு வெற்றிகரமான அரசியல் வாதியின் பார்வையில் **சித்தியின் அந்தஸ்து தாயின் அந்தஸ்துக்குச் சமமானது**" என்கிற நபிமொழி வருகிறது. இந்தச் சின்ன அறிவுரை அவரது இதயத்தைத் தொட்டுவிடுகிறது. உறவுகளை மதிக்கிற மாண்புகளை வலியுறுத்தும் மார்க்கமாகிய இஸ்லாம்தான் உண்மையான மார்க்கம் என்று நெஞ்சம் நிறைந்து கூறுகிறார்.

ஓர் அமெரிக்க இளைஞர். சத்திய செய்தியின் ஒளிக்கீற்றைப் பார்த்த உடனேயே அதனை ஏற்றுக் கொள்கிறார். அவருக்கு எங்கிருந்தோ எப்படியோ குர்ஆன் பிரதி ஒன்று கிடைத்து விடுகிறது. குர்ஆனில் இருந்து நேர்வழி பெற வேண்டும் என்கிற ஆசை அவரிடம் இருந்தது கிடையாது. பொழுது போக்காக

குர்ஆனை கையில் எடுத்தார். மேம்போக்காகப் பக்கங்களைப் புரட்டிக்கொண்டிருந்தார். ஒரு வசனத்தைப் பார்த்த மாத்திரத்தில் பக்கங்களைப் புரட்டுவதை அவருடைய விரல்கள் நிறுத்தி விடுகின்றன. மீண்டும் மீண்டும் அந்த வசனத்தையே படிக்கிறார்.

பக்கங்களைப் புரட்டி அடுத்து வருகிற வசனங்களைப் படிக்க விரும்புகிறார்தான். ஆனால் அவரது மூளை அந்த வசனத்திலேயே லயித்து விடுகிறது.

கண்கள் பனிக்கின்றன. தொண்டையை எதுவோ அடைக்கிறது. வாழ்க்கைப் புயலில் பாதுகாப்பாகக் கரை சேர உதவும் தோணி இதுதான் என அவரது மனம் உரைக்கிறது. திக்குத்தெரியாத கும்மிருட்டில் பாதை காட்டும் ஒளிவிளக்கு இதுதான் என மனம் பரபரக்கிறது.

சிந்திக்கிறார். ஆழமாக ஆராய்கிறார் அந்த அமெரிக்க இளைஞர். கடைசியில் இஸ்லாத்தை ஏற்கிறார். அந்த இளைஞரின் வாழ்க்கையை மாற்றியமைத்தது ஒரே வசனம்தான். அது இதுதான்: நம்பிக்கை யாளர்களுக்கு அவர்களின் உள்ளங்கள் அல்லாஹ்வின் நினைவினால் உருகுவதற்கும் அவன் இறக்கிவைத்த சத்தியத்தின் முன் பணிவதற்கும் நேரம் இன்னும் வரவில்லையா? (அத்தியாயம் 57 வசனம் 16)

இஸ்லாத்தை ஏற்ற பிறகு அந்த இளைஞர் ஹஜ் பயணம் மேற்கொள்கிறார். அங்கு உலகெங்கிலும் இருந்து வந்திருந்த பெரும் மார்க்க அறிஞர்கள், சான்றோர் பெரு மக்களைச் சந்தித்து ஒவ்வொரு வரிடமும் பொட்டில் அறைந்தாற்போல் ஒரேஒரு கேள்வியைக் கேட்கிறார்:

குர்ஆன் எனும் ஒப்பற்ற வழிகாட்டி நூலை மக்கள் மத்தியில் பரவலாக அறிமுகப்படுத்து வதற்கு நீங்கள் என்ன செய்தீர்கள்? ஏன் அறிமுகப்படுத்தவில்லை? வெற்று நூலா இது? இல்லை இல்லை! கல்வி அறிவு ஞானத்துக்கான களஞ்சியம் இது! வழிகாட்டுதல், நேர்வழிக்கான புதையல் இது! மன்னிக்க வேண்டும், நீங்களும் பயன்பெறாமல் மற்றவர்களையும் பயன்பெற விடாமல் புதையலைக் காத்த நாகப் பாம்புபோல் நடந்து கொண்டீர்களே இது நியாயமா?" என்று சரமாரியாக கேட்டு முடிக்கிறார் அந்த இளைஞர்.

உலக மக்கள் அனைவரும் வழிகாட்டல் பெறவே குர்ஆன் அருளப்பட்டது. திசைதெரியாமல் தத்தளித்த ஒவ்வொருவரும் அதிலிருந்துதான் நேர்வழி எது என்பதில் உறுதி கொண்டனர்!

கலீஃபா மாமூன் ரஷீதின் ஆட்சிக்காலத்தில் ஒரு நிழ்ச்சி. செல்வச் செளிப்புமிக்க, புத்திக் கூர்மையான, தகுதியும் ஆற்றலும் நிரம்பிய, செல்வாக்கு மிக்க யூதன் ஒருவன் தலை நகரிலேயே வாழ்ந்து வந்தான். இஸ்லாத்தைக் கடுமையாக விமர்சிப்பான். இஸ்லாத்தின் விரோதி என்றே பெயர் பெற்றிருந்தான்.

அந்த விரோதியை எப்படியாவது முஸ்லிம் ஆக்கிட வேண்டும் என்று கலீஃபா மாமூன் ரஃஷீத் விரும்பினார். அழைப்பு விடுத்தார். ஆனால் அந்த யூதன் கோபப்பட்டான். மூதாதையரின் மதத்தை விட்டுவிட்டு இஸ்லாத்தில் சேர விருப்பம் இல்லை அவனுக்கு! கலீஃபாவின் அழைப்பை முற்றாக நிராகரித்து விட்டான்.

ஆனால் ஓராண்டுகூட ஆகியிருக்காது. அந்த யூதன் உளமார இஸ்லாத்தை ஏற்பதாக அறிவித்து எல்லோரையும் திகைப்பில் ஆழ்த்திவிட்டான். நாலாபுறமும் வியப்புக் குறிகள்! கேள்விக்கணைகள்! ஏன், என்ன நடந்தது என்கிற விசாரிப்புகள்!

அவற்றிக்கெல்லாம் விடையளிக்கும் வகையில் அவன் சொன்னான்: உங்கள் எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அடிப்படையில் நான் ஒரு எழுத்தோவியன். நூல்களின் பிரதிகளை அழ கான கையெழுத்தில் எழுதி விற்பதே எனது தொழில். எனக்குள் ஓர் ஆசை முளைத்தது. மதங்களை எடை போடுகிற ஆசை.

தவ்ராத் வேதத்தின் பிரதிகளை எழுதும்போது வேண்டுமென்றே சில பிழைகளைச் செய்தேன். வார்த்தைகளை மாற்றினேன். பொருள் தலைகீழாக மாறும் அளவுக்குத் திருத்தங்கள் செய்தேன். தொலைதூரங்களில் இருந்தெல்லாம் யூதர்கள் வந்து அதனை வாங்கிச்சென்றார்கள். நல்ல விற்பனை. ஆனால் நான் வேண்டுமென்றே செய்த பிழைகள் எந்த யூதரின் பார்வையிலும் படவில்லை. யூதர்கள் எனது எழுத்தோவியத் திறமையைப் பாராட்டி வாங்கிச் சென்றார்களே தவிர நான் செய்த திருத்தங்களைக் கண்டு பிடிக்கவில்லை.

அடுத்து பைபிளின் பிரதிகளை எழுதும்போது பகலை இரவு என்றும் தந்தையை மகன் என் றும் ஏகப்பட்ட திருத்தங்களைச் செய்து இஷ்டத்துக்குப் புகுந்து விளையாடினேன். ஆனால் கிறிஸ்துவ பாதிரிமார்களும் அந்தத் தவறுகளைக் கண்டுபிடிக்கவில்லை. என்னுடைய கையெ ழுத்து திறமைதான் பரபரப்பாகப் பேசப்பட்டது.

பிறகு குர்ஆனின் பிரதிகளை எழுதும்போது இவ்வாறு வேண்டுமென்றே சில திருத்தங்களைச் செய்தேன். கலீஃபாவின் இஸ்லாமிய ஆட்சியின் கீழ் இருக்கிறோம் என்கிற அச்சத்தின் காரணமாக பெரும் பிழைகளைச் செய்யத் துணியவில்லை. மிகவும் ஆழ்ந்து கவனித்தால்தான் தெரியும் என்கிற வகையில் நுட்பமான சில எழுத்துப் பிழைகளைச் செய்தேன். முதல் பிரதியைக் கிராமத்திலிருந்து வந்த ஒரு பாமர முஸ்லிமுக்குக் கொடுத்தேன். அவர் பக்கங்களைப் புரட்டி ஓதத்தொடங்கியவர் நான் செய்த பிழைகளைக் கண்டுபிடித்து விட்டார். உடனே குய்யோ முறையோ எனக் கத்தத் தொடங்கிவிட்டார். குர்ஆனை சரியாக எழுதவில்லை என உரத்த குரலில் உணர்வு பொங்க ஆட்சேபித்தார். சில நிமிடங்களுக்குள் முஸ்லிம்கள் என் கடைக்குள் திரண்டு விட்டனர். கடைத்தெரு எங்கும் என்னுடைய குர்ஆன் பிரதி குறித்துத்தான் சர்ச்சை!

எனது மனத்தில் நிம்மதி ...! குர்ஆன்தான் உண்மையான இறைவாக்கு என்பதை உணர்ந்து கொண்டேன். அக்கணமே கலிமா சொல்லி இஸ்லாத்தில் இணைந்துவிட்டேன்.

## ஒரே இறைவனை நம்புவதெனில் ...!

اِنَّمَا اِلٰهُكُمْ اِلٰهٌ وَّاحِدٌ (لغة تاميل)

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை எனும் ஏகத்துவக் கொள்கையை முஸ்லிமல்லாத நண்பர்களுக்கு எடுத்துச் சொல்லும்பொழுது பல பேர் இப்படி ஒரு கேள்வி கேட்கிறார்கள்:

''எல்லா மதங்களும் ஏக இறைவனாகிய அந்தப் பரம்பொருள் ஒன்று என்றுதான் கூறுகிறது. அதைத்தானே இஸ்லாமும் கூறுகிறது. எனவே ஏகப் பரம்பொருள் ஒன்று என நம்பும் என்னைப் போன்றவர்களை இணைவைப்பாளர்கள் என்று ஏன் சொல்கிறீர்கள்?''

அன்று அதிகாலைப்பொழுதில் என் அலுவலகத்திற்கு வந்த ஓர் இந்துப் பெரியவரும் இதே கேள்வியைத்தான் கேட்டார்.

அவரிடம் நான் சொன்னேன்: ''ஐயா, அருமையான கேள்வி கேட்டீங்க. இதற்கு விளக்கம் தரும் வகையில் நான் உங்களிடம் சில கேள்விகள் கேட்கலாமா?''

''தாராளமாக''

''பரம்பொருள் ஒன்றுதான் என்று நீங்கள் சொன்னாலும் வழிபாடுகளின்போது ஏதேனும் திரு வுருவச் சிலையை முன்வைத்துத்தானே நீங்கள் பூஜைகள் செய்கிறீர்கள்?''

''ஆமாம்!''

''இதுதான் முதல் வேறுபாடு. இஸ்லாம் கூறும் இறைவன் இத்தகைய காட்சிக்கும் இத்த கைய வடிவத்துக்கும் அப்பாற்பாட்டவன். நீங்கள் ஒரே பரம்பொருளை நம்புகிறீர்கள். ஆனால் அந்தப் பரம்பொருள்தான் பரிபாலிப்பவன், படைப்பவன், இயக்குபவன், அழிப்பவன் என்று நம்பு கிறீர்களா? அதாவது ஆக்கல், காத்தல், அழித்தல் இந்த மூன்றும் அந்தப் பரம்பொருளிடமே இருப்பதாக கருதுகிறீர்களா?''

''இல்லை...! நாங்கள் அந்த மூன்றுக்கும் மூன்று தெய்வங்களை அல்லவா நம்புகிறோம்!''

''இது இரண்டாவது வேறுபாடு. உண்மையில் இந்த மூன்று ஆற்றல்களுக்கும் சொந்தக்காரன் ஏக இறைவன் மட்டுமே என் இஸ்லாம் கூறுகிறது. சரி, வானங்கள், பூமியின் ஆட்சியதிகாரம் யாருக்கு உரியது எனக் கருதுகிறீர்கள்? சட்டமியற்றும் உரிமை யாருக்கு உண்டு எனச் சொல்ல முடியுமா?"

''எங்கள் சாமிகளில் எதுவும் சட்டம் இயற்றியிருப்பதாகத் தெரியவில்லையே!"

''இது மூன்றாவது வேறுபாடு. வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சியதிகாரம் ஏக இறைவனுக்கு மட்டுமே உரியது. சட்டம் இயற்றும் **(Law Giver)** அவனுக்கே சொந்தம் என இஸ்லாம் கூறு கிறது. அடுத்து, இன்ன இன்ன செயல்கள் அனுமதிக்கப்பட்டவை (ஹலால்) இன்ன இன்ன செயல்கள் தடுக்கப்பட்டவை (ஹராம்) என நிர்ணயிக்கும் அதிகாரம் யாருக்கு உரியது?"

''இந்த ஹலால் - ஹராம் கருத்தோட்டமே எங்களிடம் இல்லையே!"

"இது நான்காவது வேறுபாடு. எந்த ஒரு செயலையும் குறித்து ஆணையிடுவதற்கோ, தடுப்ப தற்கோ இறைவனைத் தவிர வேறு யாருக்கும் உரிமை கிடையாது. யாரேனும் ஒரு மனிதர் தடுப்பதனால் எதுவும் ஹராம் (தடுக்கப்பட்டதாக) ஆகிவிடுவதில்லை. யாரேனும் ஒரு மனிதர் அனுமதிப்பதனால் எதுவும் ஹலால் - அனுமதிக்கப்பட்டதாக ஆகிவிடுவதில்லை. இது ஹலால் - இது ஹராம் எனச் சொல்லும் உரிமை படைப்பினங்களில் யாருக்கும் இல்லை. அந்த உரிமை ஏக இறைவனுக்கு மட்டுமே உண்டு"

எனது கருத்தை ஆமோதிக்கும் வகையில் அவர் சொன்னார்:

''ஆக.......! பரம்பொருள் ஒன்று என வெறுமெனே நம்பினால் போதாது! இப்படி எல்லா வகையிலும் இறைவனுடைய தகுதிகளையும் உரிமைகளையும் ஒப்புகொள்ள வேண்டும். அப்படித்தானே!''

''சரியாகச் சொன்னீர்கள்! மேலே சொன்ன அனைத்தும் கருணையுள்ள இறைவனுக்கு மட்டுமே உரியன என நம்ப வேண்டும். அவ்வாறு நம்பி, அவனையே இறைவனாக, ஆட்சியாளனாக, அதிபதியாக ஏற்று, அவனுடைய சட்டங்களுக்கு மட்டுமே அடிபணிந்து வாழ வேண்டும். அப் படிச் செய்பவர்கள்தாம் மூமின்கள் - உண்மையான ஓரிறைவன் மீது நம்பிக்கை கொண்டவர்கள். இவற்றில் ஏதேனும் ஒரு தகுதியோ அல்லது எல்லாத் தகுதிகளுமோ மற்றவர்களுக்கும் உண்டு என நம்புபவர்களை இணைவைப்பாளர்கள் என்று இஸ்லாம் கூறுகிறது. இந்த இணைவைப்பில் இருந்து விடுபட்டு, ஏக இறைவனின் பக்கம் வாருங்கள் என இஸ்லாம் அழைப்பு விடுக்கிறது!"

"அருமையான விளக்கம்...! நீங்கள் சொன்னபடி அந்த ஏக இறைவனை மட்டுமே வழிபடும் நற்பேறு எனக்கும் கிட்டுமா? கண்களில் நீர் தளும்ப, நா தழுதழுக்க அவர் கேட்டார்"

“ நான், இன்ஷா அல்லாஹ் என்றேன்”

# இவ்வுலகை இயக்குபவன் ஒரே இறைவனே!

### இறுதி வேதம் குர்ஆன் கூறுகிறது

‘‘வானங்களையும் பூமியையும் படைத்தவனும் உங்களுக்காக வானத்திலிருந்து மழையைப் பொழிய வைத்தவனும் பிறகு அதன் மூலம் அழகான தோட்டங்களை வளரச் செய்தவனும் யார்? அவற்றின் மரங் களை முளைக்கச் செய்வதற்கு உங்களால் இயலாமல் இருந்ததே! அல்லாஹ்வுடன் வேறேதேனும் கடவு ளும் (இப்பணியில் பங்கு கொண்டு) இருக்கிறார்களா? (இல்லவே) மாறாக இந்த மக்கள்தான் நேர்வழி யில் இருந்து பிறழ்ந்து சென்றுகொண்டிருக்கிறார்கள்.

மேலும் பூமியைத் தங்குமிடமாக்கியவனும் அதனிடையே ஆறுகளை ஓடச்செய்தவனும் அதற்கு (மலைகளெனும்) முளைகளை அமைத்தவனும் இரு கடல்களின் ஜலசந்திகளுக்கிடையில் தடுப்பை ஏற் படுத்தியவனும் யார்? அல்லாஹ்வுடன் வேறேதாவது கடவுளும் (இப்பணிகளில் பங்கு கொண்டு) இருக்கிறார்களா? (இல்லவே இல்லை)மாறாக, இவர்களில் பெரும்பாலோர் அறியாதிருக்கிறார்கள்.

துயரங்களுக்கு ஆளானவர் இறைஞ்சும்போது அவரது இறைஞ்சுதலைக் கேட்டு பதிலளிப்பவன் யார்? அவரது துயரத்தைக் களைபவன் யார்? மேலும் உங்களைப் பூமியில் பிரதிநிதிகளாய் ஆக்குபவன் யார்? அல்லாஹ்வுடன் வேறு எந்த ஒரு கடவுளேனும் (இப்பணிகளைச் செய்யக்கூடியதாய்) உள்ளதா? நீங்கள் மிகக் குறைவாகவே சிந்திக்கிறீர்கள்!

தரை மற்றும் கடலின் இருள்களில் உங்களுக்கு வழிகாட்டுபவன் யார்? மேலும் அவனது மழையெ னும் அருளுக்கு முன்னர் காற்றை நற்செய்தியாக அனுப்புகிறவன் யார்? அல்லாஹ்வுடன் வேறு எந்தக் கடவுளேனும் (இப்பணியைச் செய்து கொண்டு) இருக்கிறதா? அல்லாஹ் மிக உயர்ந்தவன், மிக்க மேலானவன்., இவர்கள் செய்கிற இணைவைப்புச் செயல்களை விட்டு!

முதன் முறையாகப் படைக்கிறவனும் பிறகு மீண்டும் படைக்க இருப்பவனும் யார்? வானம் மற்றும் பூமியிலிருந்து உங்களுக்கு வாழ்வாதாரம் வழங்குபவன் யார்? அல்லாஹ்வுடன் வேறு எந்த ஒரு கடவு ளேனும் (இப்பணிகளில் பங்கு கொண்டு) உள்ளதா? கூறுவீராக: கொண்டுவாருங்கள், உங்கள் அத்தாட் சியை, நீங்கள் உண்மையாளர்களாய் இருப்பின்! ” (27 : 60 - 64)

# ”இயேசுவை அல்ல, கர்த்தரையே வணங்குகிறேன்”

- கிறிஸ்தவ நண்பருடன் ஓர் உரையாடல் -

இறையில்லக் கல்லூரியில் குருத்துவக் கல்வி பயிலும் மாணவர் ஜெயராஜ், அவர் மேற்கொண்டி ருந்த ஆய்வுப் பணி தொடர்பாக சில கேள்விகள் கேட்க சமரசம் ஆபீஸு க்கு வந்திருந்தார்.

மோசேவுக்கு (மூஸா நபிக்கு) அருளப்பட்ட கட்டளைகள் குறித்து இஸ்லாம் என்ன சொல் கிறது என்று அறிந்து கொள்ள விரும்பினார். அது பற்றிய குர்ஆன் வசனங்களுடன் விரிவான விளக்கமும் எடுத்துரைக்கப்பட்டது.

அப்படியே ஜெயராஜு டன் உரையாடிக்கொண்டிருந்தபோது பேச்சு கிறிஸ்தவ மதம் பக்கம் திரும்பியது.

”இயேசுதான் இறைவன் அல்லது இறைமகன்., அவர் மீது நம்பிக்கை கொண்டால் மட்டுமே விண் ணரசு சாத்தியமாகும் எனில், இயேசுவுக்கு முன்பாக வாழ்ந்து சென்ற மக்களின் கதி என்னவாகும்? ”என்று கேட்டேன்.

ஜெயராஜ் சிரித்தபடியே, ”நான் ஆர்.சி. (ரோமன்கத்தோலிக்) அல்ல., பிராட்டஸ்டண்டு பிரிவைச் சேர்ந்தவன் ”என்றார்.

”நீங்கள் எந்தப் பிரிவைச் சேர்ந்தவராக இருந்தாலும் இயேசுவை இறைமகன் என்று நம்புகிறீர்கள்தானே? ”

”எங்கள் பிரிவுச் சகோதரர்கள் அப்படித்தான் நம்புகிறார்கள். ஆனால் நான் அப்படி நம்ப வில்லை ”

சற்றே வியப்புடன் அவரைப் பார்த்தேன். ”நீங்கள் குருத்துவக் கல்வி பயிலும் மாணவர் தானே...? ” இப்படி நான் கேட்டதும் சிரித்துவிட்டார். பிறகு அவரே தொடர்ந்தார்.

”இயேசு இறைவனோ இறைமகனோ இல்லை என்பது எனக்குத் தெரியும். நான்கு நற்செய் திகள்கூட முழுமையான இறைவாக்கு அல்ல என்றும் தெரியும். அவற்றில் இடைச் செருகலாக மனிதக் கருத்துகளும் உண்டு. எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்த பிறகு, நான் இயேசுவை வணங்காமல் அவர் அழைத்த கர்த்தரையே வணங்குகிறேன் ” என்றார்.

நான் சொன்னேன்: ”நீங்கள் சொல்வது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளிக்கிறது. ஏனெனில் இயேசு எந்த இறைவனைத் தொழுதாரோ, எந்த இறைவனின் தூதராக அவர் வந்தாரோ அந்த இறைவனைத்தான் நாங்களும் வணங்குகிறோம். அதுசரி, நீங்கள் கர்த்தரை மட்டுமே வணங் குவது மற்றவர்களுக்குத் தெரியுமா? ”

ஜெயராஜ் பதற்றப்படாமல் சொன்னார்: "தெரியாது. தெரிந்தால் என்னைப் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள். கல்லூரியிலும் தேவாலயங்களிலும் இதர கிறிஸ்தவர்களைப் போலதான் நானும் நடந்து கொள்கிறேன். தனிமையில் என் அறையில் நான் பிரார்த்திப்பது கர்த்தரை மட்டுமே ... "

"சரி, கர்த்தரை வணங்கும் முறைகள் உங்களுக்குத் தெரயுமா? " எனக் கேட்டேன்.

"தெரியாதே "

"அதை நபிகள் நாயகம் சொல்லித் தந்துள்ளார்கள். வியப்படையாதீர்கள். இயேசுவும் நபிகள் நாயகமும் அந்த ஏகனாகிய கர்த்தரிடம் இருந்து வந்தவர்களே ...! அவனுடைய திருத் தூதர்களே...! சிறிய வேறுபாடு என்னவெனில், இயேசு நாதர் இஸ்ரவேல் சமுதாயத்திற்கு மட்டும் இறைத்தூதராக வந்தார். நபிகள் நாயகம் நானிலம் முழமைக்கும் இறுதித் தூதராக வந்தார்...! ஆகவே இறுதித் தூதரின் வழிகாட்டல்படியே கர்த்தரை வணங்க வேண்டும். அது தான் ஐவேளைத் தொழுகை " எனக்கூறி தொழுகைமுறை பற்றி சுருக்கமாக விளக்கினேன்.

ஆர்வத்துடன் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்ட ஜெயராஜ் விடைபெறும்போது கூறினார்: "நீங்கள் கூறும் முறைப்படி கர்த்தரை தொழும் வாய்ப்பு இப்பொழுது எனக்கு இல்லை. அந்தக் கர்த்தர் விரும்பினால் அதற்குரிய வாய்ப்பை அவரே உண்டாக்குவார் ".

"நேரிய வழியில் நடைபோடும் நற்பேற்றை அருளும்படி தொடர்ந்து கர்த்தரிடம் இறைஞ்சிக் கொண்டே இருங்கள் " எனக்கூறி நண்பருக்கு விடைகொடுத்து அனுப்பினேன்.

## فضل الصيام

## நோன்பின் சிறப்பு

இஸ்லாம் வகுத்துத் தந்துள்ள வணக்கவழிபாடுகளை மேலோட்டமாகப் பார்க்கும்போது அவற்றில் சிரமம் இருப்பது போல் தோன்றலாம். அவை, உடலுக்கு சோர்வையும் நோவையும் கொடுப்பதாக உணர லாம். ஆனால் இபாதத் -வணக்க வழிபாடு ஓர் இறைநம்பிக்கையாளனுக்கு இன்பமாகும். ஆம், அதனை நிறைவேற்றும்போது இன்பத்தை அவன் உணர்கிறான். இவ்வுண்மையைத்தான் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இந்த அருள்மொழி குறிப்பிடுகிறது: என் கண்குளிர்ச்சி தொழுகை யில் அமைத்து வைக்கப் பட்டுள்ளது ...

அண்ணல் நபியவர்கள் நடுஇரவில் தூக்கத்திலிருந்து விழித்து நெடுநேரம் நின்று தொழும்பொழுது அவர்களின் பாதங்கள் வீங்கிவிடும். கீறல் விழுந்து நோவினை தரும். ஆனாலும் அதில்தான் நபியவர்கள் இன்பத்தை உணர்வார்கள். இறைவழிபாட் டில் அவர்களுக்குக் கண்குளிர்ச்சியும் சிந்தனைத் தெளிவும் கிடைத்ததால் அவர்களுக்கு நேரும் எல்லாக் கஷ்டங்களும் சிரமங்களும் பனிபோல் கரைந்து விடும்!

இவ்வாறுதான் நபித்தோழர்கள், அவர்களுக்குப் பின் வந்த சான்றோர்களின் வாழ்வும் அமைந்துள் ளது. இறைவழிபாட் டில் வாய்மையான ஈடுபாடு அவர்களுக்கு இருந்ததால் அதில் அவர்கள் பெற்ற இன்பத்தைப் பற்றி இவ்வுலகிற்கு இவ்வாறு அறிவித்துக்கொண்டிருந்தார்கள்: **நாங்கள் இறைவழிபாட்டில் இன்பத்தை உணர்கிறோம்., அது பற்றி அரசர்களுக்குத் தெரிய வந்தால் அதன் பேரில் வாட்களை உருவிக் கொண்டு எங்களோடு சண்டைக்கு வந்து விடுவார்கள்!**

நோன்பிலும் இத்தகைய இன்பமும் மனநிறைவும் அமைந்துள்ளது! பகல்முழுவதும் பசித்தும் தாகித் தும் இருப்பது கஷ்டம்தான், சிரமம்தான், பகல் முழுவதும் மனதுடன் கடும் போராட்டமும்தான்! ஏனெ னில் நோன்பு வாயையும் வயிற்றை யும் கட்டிப்போடுகிறது. மனைவியுடன் இன்பம் அனுபவிக்கக்கூட தடை விதிக்கிறது! ஆனால் அப்படிபட்ட கட்டுப்பாட்டை பேணுபவருக்குத்தான் நபி(ஸல்)அவர்கள் இவ் வாறு நற்செய்தி சொல்கிறார்கள்: தன் தாடைகளுக்கு நடுவிலுள்ளதையும் தன் கால்களுக்கு நடு விலுள்ளதையும் பேணிநடப்பதாக யார் என்னிடம் பொறுப்பு தருகிறாரோ அவருக்கு சுவனபதிக்கு நான் பொறுப்பு ஏற்றுக்கொள்கிறேன்" (நூல்: புகாரி, முஸ்லிம்) இத்தகைய மனக்கட்டுப்பாட்டிற்கு நோன்பு நல்லதொரு பயிற்சிக் களமாகத் திகழ்கிறது!

இவ்வாறு பல்வேறு கோணங்களில் நோன்பு தனிச்சிறப்பு பெற்றுத் திகழ்கிறது. அபூ உமாமா (ரலி) அவர்கள் கூறு கிறார்கள்: அல்லாஹ்வின் தூதரே!(நான் கடைப்பிடிக்கத்தக்க) ஏதேனும் அமலை எனக்கு ஏவுங்கள் என்று நான் கேட்டேன்! அதற்கு நபியவர்கள் சொன்னார்கள்: நீ நோன்பைக் கடைப்பிடி. அதற்கு நிகர் எதுவும் இல்லை. இவ்வாறு நான் மூன்று முறை கேட்டபோதும் நபியவர்கள் இதே பதிலையே கூறினார்கள். (நூல்: நஸாஈ, இப்னு ஹு ஸைமா, ஹாகிம்)

இதன் பிறகு அபூ உமாமா (ரலி) அவர்கள் எந்த அளவு நோன்பைக் கடைப்பிடிப்பவர்களாய் ஆனார் கள் என்றால், அவர்கள் வீட்டிற்கு விருந்தாளி வந்தாலே தவிர பகல் நேரத்தில் அடுப்பு எரியாது என்று வரலாற்றில் பதிவாகியுள்ளது!

ஒரு மனிதனுக்கு உலகத்தில் பல்வேறு சோதனைகள் ஏற்படுகின்றன. மனைவி -மக்களால், பணத் தால், அண்டை வீட்டினரால் பல பிரச்சினைகள் அவனுக்கு! வீட்டில் மனைவி மக்களின் தேவைகளை நிறைவேற்றுவதற் கென அதிக நேரங் களைச் செலவிடுகிறான். சிலபொழுது அதில் இறைவனையே மறந்து பராமுகமாகிறான். ஜமாஅத்துடன் சேர்ந்து தொழுவ தற்குக்கூட நேரம் கிடைப்பதில்லை.

பணம் ஈட்டுவதற்காக உழைத்துக் கஷ்டப்பட்டுகிறான். வியாபாரம், தொழில் துறைகளில் நேரத்தை யும் மூளையையும் ஈடுபடுத்துகிறான். அதனால் வழிபாட்டில் சிறிது அலட்சியம் ஏற்படுகிறது!

இவ்வாறே அண்டைவீட்டாருடன் பல குழப்பங்கள். சிலபொழுது அவர்களுக்குத் தவறு செய்து விடுகிறான். அவர்கள் மனம் நோகும் படியாக நடந்துவிடுகிறான். உயர்தர உணவு வகைகள் தயார் செய்யும் நேரத்தில் அவர்களுக்கு எதுவும் உண்ணக்கொடுக்காமல் மறந்துவிடுகிறான். இத்தகையே சோதனைத்தான் குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது:

إِنَّمَا اَمْوَالُكُمْ وَ اَوْلاَدُكُمْ فِتْنَةٌ وَ اللهُ عِنْدَهُ اَجْرٌ عَظِيْمٌ (سورة التغابن ١٥)

உங்களுடைய பொருட்களும் பிள்ளைகளும் ஒரு சோதனை யாகவே உள்ளன. ஆனால் அல்லாஹ்விடத்தில் மகத்தான கூலி உள்ளது.

يَا اَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا لاَ تُلْهِكُمْ اَمْوَالُكُمْ وَ لاَ اَوْلاَدُكُمْ عَنْ ذِكْرِ اللهِ (سورة المنافقون ٩)

இறைநம்பிக்கை கொண்டவர்களே! உங்களுடைய பொருட்களும் பிள்ளைகளும் அல்லாஹ்வை நினைவு கூர்வதை விட்டும் உங்களைத் தடுத்திட வேண்டாம்.

ஆனால் இவைபோன்ற தவறுகளையும் குற்றங்குறைகளையும் களைவதில் நோன்பு சிறந்த வழிபாடாகத் திகழ்கிறது. இமாம் புகாரி அறிவிக்கிறார்கள்: ஒருமுறை உமர் (ரலி) அவர்கள் கேட்டார்கள்: குழப் பம் தொடர்பாக வந்துள்ள ஏதேனும் நபிமொழியை மனப்பாடம் செய்திருப்பவர் உண்டா? அப்பொழுது ஹு தைபா (ரலி) அவர்கள் சொன்னார்கள்: அது பற்றி நபியவர்கள் இவ்வாறு கூறியதை நான் கேட்டுள்ளேன்: தனது மனைவி - மக்களால், தனது பணத்தால், தன் அண்டை வீட்டினரால் ஒரு மனிதனுக்கு ஏற்படும் குழப்பங்களுக்குத் தொழுகை, நோன்பு, தர்மம் ஆகியவை பரிகாரமாக அமைகின்றன. (நூல்: புகாரி) இத்தகைய நோன்பை வாய்மையுடன் நோற்று இம்மையில் தூயவாழ்வும் மறுமையில் நிலையான பேரின்பங்களும் பெறும் பாக்கியத்தை அல்லாஹ் நமக்கு அருள்வானாக!

# من أحكام الصيام

# நோன்பின் சட்டங்களில் சில ...

## القطرة لا تفسد الصوم

### சொட்டு மருந்து ஊற்றுவதால் நோன்பு பாழாகாது

**கேள்வி:** வாந்தி மிகைத்தாலோ கண்ணில் - மூக்கில் சொட்டு மருந்து ஊற்றினாலோ நோன்பு முறியாது என்று சொல்லப்படுகிறதே! உங்கள் கருத்து என்ன?

**பதில்:** மேலே சொன்ன காரணங்களால் நோன்பு முறியாது என்று சொல்வது சரிதான். ஏனெனில் பொதுவழக்கிலும் ஷரீஅத்தின் பார்வையிலும் உண்ணல் - பருகுதல் என்று இவற்றிற்குச் சொல்லப்படுவதில்லை. மேலும் உணவுப்பாதை அல்லாத வேறு வழியாக இவை உடலினுள் செல்கின்றன. ஆனாலும் கண்ணில் - காதில் மருந்து ஊற்றுவதை இரவு வரையில் பிற்படுத்தினால் கருத்து வேறுபாடுகளைத் தவிர்க்கும் வகையில் அது மிகவும் பேணுதலாக இருக்கும்.

இவ்வாறே கட்டுப்படுத்த முடியாமல் வாந்தி வந்தால் நோன்பு முறியாது. ஏனெனில் நிச்சயமாக அல்லாஹ் எவரையும் அவரது சக்திக்கு மேலாகக் கஷ்டப்படுத்தமாட்டான். அது மட்டுமல்ல சிரமத்தை அகற்றுவதே இஸ்லாத்தின் அடிப்படையாகும். குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்: தீன்- இறைவழிபாட்டின் விஷயத்தில் உங்கள் மீது எந்தச் சிரமத்தையும் அல்லாஹ் வைக்கவில்லை. (22 : 78) இதுபோல நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: எவரை வாந்தி மிகைத்து விடுகிறதோ அவர் (அந்த நோன்பை முறித்துக்கொண்டு) மீண்டும் நோற்க வேண்டியதில்லை. ஆனால் எவர் வேண்டுமென்றே வாந்தி எடுக்கிறாரோ அவர் (அந்நாளின் நோன்பை முறித்துவிட்டு) மீண்டும் நோற்க வேண்டும். (நூல்: அபூ தாவூத்)

(சவூதி ::பத்வா கமிட்டி اللجنة الدائمة للافتاء )

## الاسراف فى مائدة الافطار

### உணவில் வீண்விரயம்

**கேள்வி:** நோன்பு திறப்பதற்கு வகைவகையான உணவுகள் தயாரித்து வீண்விரயம் செய்வதால் நோன்பின் நன்மை குறையுமா?

**பதில்:** நோன்பின் நன்மையில் அது குறைவு ஏற்படுத்தாது. ஆனால் உண்ணுங்கள்., பருகுங்கள். ஆனால் வீண்விரயம் செய்யாதீர்கள். வீண்விரயம் செய்பவர்களை நிச்சமாக அல்லாஹ் நேசிக்கமாட்டான். (7: 31) எனும் இறைவசனத்தின் எச்சரிக்கையின் கீழ் இது வரும். வீண்விரயம் என்பது அது தன்னளவில் தடைசெய்யப்பட்டதாகும். பொருளாதாரம் என்பது மிக முக்கியம். அதுவே பாதி வாழ்க்கை ஆகும். எனவே உணவுப் பொருட்கள் மீதம் இருந்தால் தர்மம் செய்திட வேண்டும். அதுவே மிகவும் சிறந்தது. (இப்னு உஸைமீன் (ரஹ்) فضيلة الشيخ محمد بن صالح العثيمين رحمه الله

## حكم من أكل فى اثناء الأذان أو بعده بقليل

### பாங்கு சொல்லும்போதோ அதற்குச் சிறிது நேரம் பிறகோ உணவு உட்கொள்வதன் சட்டம் என்ன?

**கேள்வி:** குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்: விடியற்காலை எனும் வெள்ளை நூல் கருப்பு நூலில் இருந்து உங்களுக்குத் தெளிவாகத் தெரியும் வரையில் உண்ணுங்கள்., பருகுங்கள்! (2 : 187)

ஸு ப்ஹு பாங்கு சொல்லும்போதோ அதற்குக் கால் மணிநேரம் கழித்தோ ஒருவர் ஸஹர் உணவு உட்கொண்டால் அல்லது சிறிது தண்ணீர் குடித்தால் அதன் சட்டநிலை என்ன?

**பதில்:** அதிகாலை உதயமாகிவிட்டதெனத் தெளிவாகத் தெரியும் முன்புதான் உண்டார், பருகினார் என்றால் அந்நோன்பை மீண்டும் நோற்க வேண்டியதில்லை. ஆனால் அதிகாலை உதயமாகிவிட்டது என்று தெரிந்த பிறகு என்றால் அந்நோன்பு கூடாது. வேறு நாளில் நோற்கத்தான் வேண்டும். உண்டது - பருகியது முன்பா பிறகா என்று தெரியாவிட்டால் அந்நோன்பை வேறு நாளில் நோற்க வேண்டியதில்லை. ஏனெனில் இரவு இன்னும் நீடிக்கிறது என்பதே அசல் நிலை! ஆனாலும் ஒரு இறைநம்பிக்கை யாளன் தனது நோன்பில் பேணுதலாக இருக்க வேண்டும். பாங்கு சப்தம் கேட்டதும் நோன்பை முறிக்கும் காரியங்களை விட்டும் விலகிட வேண்டும். அது ஸு ப்ஹு உடைய பாங்கு இல்லை என்றால் பிரச்னை இல்லை. (சவூதி ஃபத்வா கமிட்டி اللجنة الدائمة للافتاء )

## நல்லுரைகளை மறந்தால் ...!

عن عقبة ابن عامر عن النبيﷺ قال: اِذَا رَاَيْتَ اللهَ عز وجل يُعْطِى الْعَبْدَ مِنَ الدُنْيَا عَلى مَعَاصِيْهِ مَا يُحِبُّ فَاِنَّمَا هُوَ اسْتِدْرَاجٌ ثُمَّ تَلاَ رَسُوْلُ اللهِ ﷺ ( فَلَمَّا نَسُوْا مَا ذُكِّرُوْا بِهِ فَتَحْنَا عَلَيْهِمْ اَبْوَابَ كُلِّ شَيْءٍ حَتّى اِذَا فَرِحُوْا بِمَا اُوْتُوْا اَخَذْنَاهُمْ بَغْتَةً فَاِذَا هُمْ مُبْلِسُوْنَ (الأنعام ٤٤)

நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: ஓர் அடியான் பாவங்கள் செய்து கொண்டிருக்கிறான்., அப்படியிருந்தும் அவனது விருப்பத்திற் கேற்ப உலகின் அருள்வளங்களை அவனுக்கு அல்லாஹ் கொடுத்துக் கொண்டிருக்கும் நிலையை நீங்கள் கண்டால் இது (இறைவன் அளிக் கும்) காலஅவகாசம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். பிறகு நபியவர்கள் இந்த குர்ஆன் வசனத்தை ஓதினார்கள்: பின்னர் அவர் களுக்குப் போதிக்கப்பட்ட நல்லுரைகளை அவர்கள் மறந்தபொழுது அருள்வளங்களின் அனைத்து வாயில்களையும் அவர்களுக்காக நாம் திறந்து விட்டோம். எதுவரை எனில் தங்களுக்கு வழங்கப்பட்டிருந்த இன்ப நலன்களில் அவர்கள் திளைத்திருந்தபோது திடீரென அவர் களை நாம் பிடித்தோம். அப்போது அவர்கள் முற்றிலும் நிராசை கொண்டவர்களாய் ஆகிவிட்டனர் (குர்ஆன் 6:44)

## விளக்கம்

ஒரு மனிதன் அல்லது ஒரு சமுதாயம் வெறும் உலக செல்வச் செழிப்பில் மிதப்பதைப் பார்த்து அல்லது அதிகார பீடத்தில் அமர்ந் திருப்பதைப் பார்த்து இந்த மக்களை அல்லாஹ் திருப்தி கொண்டு விட்டான் எனக் கருதுவது சரியல்ல! மாறாக இது கடுமையான சோதனைக்குரிய ஒரு நிலையே ஆகும். இதன் பிறகு இறைவனின் வேதனை திடீரென வந்து அந்தக் குற்றவாளிகளைப் பிடித்துக்கொள்கிறது!

எடுத்துக்காட்டாக, மீன் பிடிப்பவன், முள் மீன் வாயில் சிக்கிய உடனேயே தூண்டிலை வெளியே இழுத்து விடுவதில்லை. மாறாக சிறிது நேரம் அதன் போக்கில் விட்டுவிடுகிறான். அந்த மீன் அங்கும் இங்குமாகச் சுற்றித் திரிந்து களைத்துப்போகும்போது திடீரென வேகமாக அதனை வெளியே இழுத்துத் தரையில் போட்டு விடுகிறான். ஆனால் இந்த இடைக்காலத்தில் சுதந்தரச் சூழலில் சொகுசாக உலவிக் கொண்டிருப்பதாக அந்த அப்பாவி மீன் நினைத்துக் கொண்டிருக்கிறது.

# மானத்தோடு வாழ இஸ்லாமே கதி!

**(திருநெல்வேலி மாவட்டம் மீனாட்சிபுரத்தில் அரிசனங்கள் இஸ்லாத்தில் சேர்ந்த நிகழ்ச்சியை முன்னிட்டு தமிழக முதல்வர் மு. கருணாநிதி அவர்கள் முரசொலியில் (1984) எழுதிய கட்டுரை)**

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற திருமூலர் திருவாக்குதான் கடவுள் கொள்கை பற்றி - மனித சமுதாயத்தைப் பற்றி தி.மு. கழகத்தின் கொள்கை என்று அண்ணா சொன்னார்.

ஒன்றே குலம் என்கிறோம். ஆனால் ஒன்றே குலம் என்கிற நிலை இன்றைக்கு நாட்டில் இருக்கிறதா? அதுவும் குறிப்பாக இந்திய திருநாட்டில், சிறப்பாகத் தமிழகத்தில் இருக்கிறதா? இன்றைக்கு மீனாட்சி புரத்தில் 500 - க்கு மேற்பட்ட குடும்பத்தினர் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள், அரிசனங்கள் திடீரென்று இஸ்லாமிய சமுதாயத்திலே - இஸ்லாமிய மார்க்கத்திலே இணைந்து விட்டார்கள். முதல்நாள் கந்தலாடை கட்டி இருந்தவர்கள் மறுநாள் கைலி உடுத்தினார்கள். முதல்நாள் வரண்ட தலையோடு இருந்தவர்கள் மறுநாள் தொப்பி அணிந்து கொண்டார்கள். முதல்நாள் கிணற்றங் கரைக்குச் செல்லமுடியா தவர்கள் மறுநாள் பொதுக்கிணற்றுக்குச் செல்லக்கூடிய அருகதையைப் பெற் றார்கள். இதன் ஆழத்தை - அடிப்படையை - மூல காரணத்தை அறிய வேண்டாமா?

ஏன் இப்படி நடைபெற்றது? நான் கேட்கிறேன். நீங்கள் எண்ணிப்பார்க்க வேண்டும். ஒரு முஸ்லிம் இந்துவாக முடியுமா? ஒரு கிறிஸ்துவர் இந்துவாக முடியுமா? ஆனால் ஒரு இந்து கிறிஸ்துவனாக ஆகிவிடுகிறான்., முஸ்லிமாக ஆகிவிடுகிறான். என்ன காரணம்? ஒரு இந்து செட்டியாராக இருக்கலாம். முதலியாராக இருக்கலாம். அவர் வன்னியராக இருக்கலாம். யாதவராக, கவுண்டரா இருக்கலாம். பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்தவராக இருக்கலாம். அல்லது அரிசனன் - தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்தவர் கிறிஸ்துவராக மாறிவிடலாம். ஆனால் ஒரு முஸ்லிமோ கிறிஸ்தவரோ இந்துவாக ஆகுவதற்கு இந்து மதத்திலே வழி இருக்கிறதா?

இங்கே செட்டியாரோ ஒரு முதலியாரோ ஒரு கவுண்டரோ கிறிஸ்தவராக மாறினால் அவருக்கு அங்கே பெயர் கிறிஸ்தவர். முஸ்லிமாக மாறினால் அங்கே பெயர் முஸ்லிம். அவ்வளவுதான்.

ஆயிரக்கணக்கான பிரிவினைகள் கொண்ட ஒரு அமைப்பின் தொகுப்புதான் இந்து மதமே தவிர இந்து மதம் என்று ஒரு கான்கிரீட்டாக ஒரு மதம் உண்டா? நூற்றுக்கணக்கான வழிகாட்டிகள், அவ ரவர்கள் காட்டுகிற வழிகள் - வெவ்வேறு ஆயிரக்கணக்கான விதிமுறைகள்.

எனவேதான் ஒரு கிறிஸ்தவனோ முஸ்லிமோ இந்துவாக வேண்டுமென்று விரும்பி வந்தால்கூட அவர் இந்துவாக முடியாது. காரணம் அவரை செட்டியாரிலே சேர்ப்பதா? அல்லது கவுண்டரிலே சேர்ப்பதா? எதில் சேர்ப்பீர்கள்? இதுதான் மதத்திலே இருக்கிற பிற்போக்குத் தன்மை. மதத்திற்குக் கட்டப்பட்டி ருக்கிற அரண். அப்படிப்பபட்ட ஒரு அரணைக் கட்டிவிட்டு ஐய்யய்யோ! இந்து மத்திலே இருந்தவர்கள், பிற மதங்களுக்குச் செல்கிறார்களே என்று கூச்சல் போட்டால் என்ன பயன்? எந்தப் பயனும் இல்லை.

இன்றைக்கு மீனாட்சிபுரத்திலே 500- க்கு மேற்பட்ட குடும்பங்கள்,திடீரென்று தாங்கமுடியாத கொடுமை, வகுப்பு வெறியர்களுடைய தாங்க முடியாத தாண்டவம் இவைகளின் காரணமாக வேறு மதங்களுக்கு மாறிவிட்டார்கள் என்றால் அப்படி மாறுகின்றவர்கள் எப்படிப்பட்ட மன உணர்வோடு மாறி இருப் பார்கள்?

அவர்கள் அரிசனங்களாக இருந்தால் அவர்களுக்கு ரிசர்வ் சீட் உண்டு. தேர்தலிலே தனித் தொகுதி உண்டு. கல்லூரியிலே சேர - உத்தியோகங்களைப் பெற உரிய இட ஒதுக்கீடு உண்டு. இவைகளை யெல்லாம் இழந்து விட்டு முஸ்லிமாக மாறுகிறேன் என்று ஒரு அரிசன இந்து எண்ணுகிறார் என்றால் காரணம்,தனக்கு இட ஒதுக்கீட்டை விட மானம்தான் பெரிது., நான் சமத்துவமாக நடத்தப்பட வேண் டும் என்கிற எண்ணம்தான்.

எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்றார் பாரதி. இந்தியா சுதந்திரம் பெற்று 40 ஆண்டுகளை நெருங் கிக் கொண்டிருக்கிற காலகட்டத்தில்கூட நாங்கள் இப்படி வாழ்வது நியாயம்தானா? என்று எழுந்த கேள்வி யினுடைய பதிலல்லவா மீனாட்சிபுரங்கள்? நன்றி : இஸ்மி (வக்பு வாரிய மாத இதழ்)

لماذا اسلمت ؟ (المسلم الجديد يبين قصة اعتناقه دين الاسلام )

## இஸ்லாம்தான் எனக்கு நிம்மதி அளித்தது

நீலகிரி மாவட்டம் குன்னூரைச் சேர்ந்த நூருல் அமீன் (பழைய பெயர் சுப்ரமணி) என்பவர் புதிதாக இஸ்லாத்தைத் தழுவியவர். அவர் ஏன் இஸ்லாத்தைத் தழுவினார் என்பதை இங்கு விளக்குகிறார்.

"நான் சிறு வயது முதலே இறைவழிபாட்டில் அதிக ஆர்வமுள்ளவன். இந்து மதத் தைப் பின்பற்றி வாழ்ந்து வந்தும் என் மனதில் அமைதியில்லை. ஏதோ ஒரு விரக்தி. இதனால் கோயில், வழிபாடு என்று எல்லாவற்றையும் சிறிது காலத்திற்கு நிறுத்திவைத் தேன். நாத்திகனாய் மாறினேன். அப்பொழு தாவது நெஞ்சுக்கு நிம்மதி கிட்டியதா என்றால் இல்லை. அமைதியின்மை இன்னும் அதிகமாகியது.

சிறு வயதிலேயே நெஞ்சில் பதிந்த இறைஉணர்வு என்னை நாத்திகனாய் வாழவிடவில்லை. மீண்டும் ஆத்திகத்தின் பக்கம் திரும்பினேன்.

இந்து மதத்தில் கிடைக்காத நிம்மதி கிறிஸ்தவத்தில் கிடைக்கும் என நம்பி, பைபிளை படிக்கத் தொடங்கினேன். புழைய ஏற்பாட்டில் கொரிந்தியர் அதிகாரத்தில் விக்கிரக ஆரா தனை கூடாது எனும் வசனத்தைப் படித்து யோசித்தேன். சிலைவணக்கம் கூடாது என்று வேதம் தெளிவாக கூறியிருக்க கிறிஸ்தவர்கள் சிலைகளைத் தொழுகிறார்களே என்று அதனையும் வெறுத்தேன். பிறகு பெத்தகோஸ்தே சபையில் முழு நேர ஜெபத்திற் குச் சென்று பரிசுத்த ஆவியைப் பெற முயன்றேன் ...!

நான் தேடிய அமைதி எங்கும் கிடைக்கவில்லை. என் ஆத்மா என்னோடு போரா டிக்கொண்டி ருந்தது. அந்தப் போராட்டத்தை எப்படிச் சமாளிப்பது எனத் தெரியாமல் தவித்துக்கொண்டிந்தேன். அந்தச் சமயத்தில்தான் லியோபால்டு எழுதிய **Road To Mecca** எனும் நூலின் தமிழ்மொழிபெயர்ப்பு எனக்குக் கிடைத்தது. அதைப் படிக்கப்படிக்க என்னுள் ஒரு புதிய உலகம் விரிந்தது. எனது சத்தியத் தேடல் ஒரு திருப்பு முனையை நெருங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்தேன். இஸ்லாமியக் கொள்கை களை ஆராய்ந்தேன். ஏகத்துவம் - ஓரிறைக் கொள்கை என் நெஞ்சை அள்ளியது. ஐந்து ஆண்டு களுக்கு முன்பு இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டேன்...! இஸ்லாம் அதன் பெயருக்கு ஏற்பவே சாந்தியை, நிம்மதியை என் நெஞ்சில் நிறைத்தது.

இப்பொழுது என் குடும்பத்தில் என் தாய், தந்தை, தங்கை ஆகியோரும் இந்த இஸ்லாமிய சாந்தி நெறியை ஏற்றுக்கொண்டுள்ளனர். எனக்குக் கிடைத்த நேர்வழி மற்ற வர்களுக்கும் கிடைக்க வேண்டும் என்பதே என் விருப்பம். அதற்காகப் பாடுபடுவேன். அழைப்புப் பணிதான் என் இலட்சியம். இந்த வழியில் பாடுபடும்போது துன்பங்களும் துயரங்களும் வரும் என்று எனக்குத் தெரியும். அண்ணல் நபிகளாரின் தூய வாழ்வையும் நபித்தோழர்களின் தியாக வாழ்வையும் நெஞ்சில் நிறுத்தித் தொடர்ந்து முன்னேறு வேன்"

## சார், ஒரு நிமிடம் ...!

இறைவன் என்பவன் இணைதுணையற்றவன். அவன் யாரையும் பெறவுமில்லை. யாராலும் பெறப் படவும் இல்லை. அவனுக்கு மனைவி, பிள்ளைகள், குடும்பம் எதுவுமே கிடையாது. அவன் தனித்த வன். யாதொரு துணையும் தேவையும் அற்றவன். இப்பேரண்டம் முழுவதையும் படைத்துப் பரிபாலிப்ப வன். இதுதானே உண்மையாக இருக்க முடியும்?

ஆனால் அறியாமையில் சிக்கிய மனிதர்கள் சிலர் கற்சிலைகளை வடித்துக் கொண்டு அவற்றைக் கடவுள் எனக் கருதி வணங்குகிறார்கள். அது விஷயத்தில் ஒரு பகுத்தறிவு உள்ள மனிதனின் செயல் பாடு எப்படி இருக்கும் என்பதற்கு வர லாற்றில் இருந்து ஓர் எடுத்துக்காட்டு.

காலாகாலமாகச் சிலைவணக்கத்தில் ஈடுபட்டு வந்த ஒரு குடும்பத்தில் பிறந் திருந்தும் அபூ பக்ர் (ரலி) அவர்கள் ஒருநாளும் சிலைவணக்கம் செய்ததில்லை. இது, அவர்கள் மீது இறைவன் புரிந்த ஓர் அருளேயாகும். பிற் காலத்தில் நபி (ஸல்) அவர்களுடனும் தோழர்களுடனும் அமர்ந்து பேசிக் கொண்டி ருந்த ஒரு தருணத்தில் பெருமானார் அவர்களே, தாங்கள் வாழ்நாள் மீது ஆணையாக! ஓரு போதும் நான் சிலைக்கு முன் மண்டியிட்டடதே இல்லை என்று அபூ பக்ர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அதைக் கேட்டு வியப்படைந்த உமர் (ரலி) அவர்கள், எத்தனை ஆண்டுகளை அறியாமைக் காலத் தில் கழித்திருக்கிறோம். அவ்வாறிருந்தும் சிலைக்கு முன் மண்டி யிட்டதில்லை என்று கூற எவ்வாறு துணிந்தீர்? என்று கேட்டார்கள்.

அதற்கு அபூ பக்ர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:

ஒரு நாள் என் தந்தை அபூ குஹாபா என்னை அழைத்துக் கொண்டு வீட்டினுள் சென்றார். அங்கே அவர் வண்ங்கி வந்த ஒரு சிலை இருந்தது. அதனை எனக்குச் சுட்டிக்காட்டி இதுதான் உன்னைப் படைத்த மேலான கடவுள்., நீ இதன் முன் மண்டியிட்டு வணங்கு என்று கூறிவிட்டுச் சென்றார். அந்தச் சிலையின் அருகில் சென்று, நான் பசியோடு இருக்கிறேன்., எனக்கு உணவு கொடு என்று கேட்டேன். அது பதில் கூறவில்லை. உடுத்துவதற்கு எனக்கு ஆடை ஒன்று தா என்று கேட்டேன். அதற்கும் அது மவுனமாகவே இருந்தது.

பின்னர் அங்கே இருந்த ஒரு கல்லைக் கையில் எடுத்துக்கொண்டு இதனை உன் மீது எறிகிறேன். நீ உன்னைக் காப்பாற்றிக் கொள் என்றேன். எவ்வித அசைவும் இல்லை. அக்கல்லை அதன் மீது வீசினேன். சிலை முகங்குப்புற விழுந் தது. சிலையோடு நான் கொண்டிருந்த தொடர்பு இவ்வளவுதான் என்று விளக்கி னார்கள் அபூ பக்ர் (ரலி) அவர்கள்.

இந்த 21 ஆம் நூற்றாண்டில்கூட மக்கள் சிந்திக்க மறுத்தால் விடிவு காலம் ஏது?

## اعتناق المبشر النصرانى الدين الاسلامى

## ஒரு கிறிஸ்தவப் போதகர் இஸ்லாத்தைத் தழுவினார்!

ரியாஸ் பீட்டர் என்பது அவரது பெயர். கிறிஸ்தவ மதத்தில் காணப்பட்ட குழப்பங்களும் முரண்பாடுகளும்தான் தனக்கு கிறிஸ்தவத்தை ஆராய்ச்சி செய்யும் மனப்பாங்கைத் தந்தது என்கிறார்.

பைபிளில் ஓரிடத்தில் மர்யம் யோசேப்பின் மனைவி என்றும் பிறிதோர் இடத்தில் கன்னி மேரி என்றும் கூறப் படுகிறது. இதேபோல இயேசு (ஈஸா) தேவ குமாரன் என ஓரிடத்திலும் தேவன் என்று மற்றோர் இடத்திலும் காணப்படுகிறது. இந்த முரண்பாடுகளை பைபிளின் ஆதாரத்துடன் பீட்டர் குறிப்பிடுகிறார்.

பீட்டர் ஒருதடவை தன் தந்தையுடன் தேவாலயம் சென்றார். அங்கே ஒருவசனம் குறித்து அவ ருக்கு ஐயம் எழுந்தது. அது என்ன? சிலுவையில் அறையப்படும் முன்னர் இயேசு சொல்வதாக ஒரு வச னம்: "நான் போனால் தான் அந்தத் துணையாளரை உங்களிடம் அனுப்ப முடியும். அவர் உங்களை உண்மையின் பால் வழிநடத்து வார்" என்பதே அந்த வசனம்.

பீட்டர் இதனைத் தன் தந்தையிடம் சுட்டிக்காட்டி விளக்கம் கேட்கிறார். அதற்குத் தந்தை சொன் னார்: "இன்று வரை அந்தத் துணையாள் வரவில்லை. ஆனால் அரேபிய பாலைவனத்தில் முஹம்மத் என்பவர் தோன்றினார்., அவர் தம்மை 'திருவாக்கினர்' என்று கூறிக்கொண்டார். ஆனால் அவர் ஒரு சூனியக்காரர். அவரது இஸ்லாமிய மதம் பயங்கரவாத, காட்டுமிராண்டித்தன மதம். முஸ்லிம்கள் நாக ரிகம் அற்றவர்கள்" என நீண்ட தன் கருத்தைச் சொல்கிறார். - தந்தையின் இந்த வாசகங்கள் பீட்ட ரின் சத்தியத் தேடல் வேட்கையை இன்னும் அதிகரிக்கச் செய்தது.

இஸ்லாமிய நூல்கள் பல படிக்கிறார். அவை கிறிஸ்தவ அறிஞர்களின் கூற்றுக்கு மாற்றமாக இருப்ப தையும் மன உணர்வுக்கும் இஸ்லாத்திற்கும் மிக நெருக்கமாக இருப்தையும் அறிந்து உற்சாகம் அடை கிறார். இதனால் இஸ்லாமிய அறிஞர்களையும் முஸ்லிம்களையும் நாடிச்செல்கிறார். அங்கேயும் பல வேதனைகள் காத்திருக்கின்றன.

மூட்டை முடிச்சுகளோடு பள்ளிவாசல்களுக்குப் பயணம் செய்து தங்கள் மார்க்கத்தை தங்களுக் குள்ளே போதனை செய்யும் தப்லீக் குழு. இஸ்லாத்தை அறிய நாடி, அவர் அமர்ந்த சபையில், மோச மான கோப்பை களில் டீ கொடுத்த அவலம்., தானே இஸ்லாம் என்று பறைசாற்றிய ஒரு பீர் சாஹிப், திக்ரு (தியான) சபையை இஸ்லாமியப் பெரியார் என்ற போர்வையில் நடத்தும் கிறிஸ்தவ மெஷினரியின் கைக் கூலியுடன் சந்திப்பு -இவை போன்ற கசப்பான பல அனுபவங்களால் தன் பழைய வாழ்க்கைக்கே போக முடிவு செய்யும் போது மற்றொரு திடீர் திருப்பம்!

ஜாமிஅத்துல் இஹ்ஸான் எனும் இஸ்லாமிய மையத்தின் தலைவர் காரி கலீலுர் ரஹ்மான் ஜாவீத் அவர்களுடன் ஒரு சந்திப்பு. அவரிடம் பீட்டர், ”ஈஸா (அவை) அவர்கள் தந்தையின்றிப் பிறந்ததால் அவரை கிறிஸ்தவர்கள் இறைமகன் என்று நம்புகிறார்கள். அதைப் பற்றி தங்களின் கருத்து என்ன? ” என்று கேட்டார். அதற்கு கலீலுர் ரஹ்மான் ஜாவீத் கூறினார்கள்: ”தாயும் தந்தையுமின்றி பிறந்த ஆதமை இவர்கள் என்னவென்று கருதுவார்கள்? ” என்று எதிர் கேள்வி கேட்டு அதையே விளக்கமாக முன்வைத்தார்.

உண்மையான மார்க்க அறிஞரைச் சந்தித்துவிட்ட உற்சாகத்தில் பீட்டர் தன் சந்தேகங்களை - வினாக்களை அவரிடம் எழுப்ப தெளிந்த நீரோடையாக விடைகளும் தீர்வுகளும் கிடைக்கின்றன. பீட்டர் இஸ்லாத்தைத் தழு வுகிறார். தனது பெயரை ரியாஸ் பீட்டர் என்று மாற்றி அமைக்கிறார்.

இஸ்லாத்தை ஏற்றதால் தன் தந்தை மற்றும் சமூகத்தை விட்டு பரிந்து வீதிக்கு வருகிறார் ரியாஸ். ஒரு பள்ளி வாசலில் ஸஜ்தாவில் விழுந்து, ”யா அல்லாஹ், என்னிடம் ஈமான் மட்டுமே எஞ்சியுள்ளது. என்னை வழி கேட்டில் விட்டு விடாதே. எனக்கு உதவி செய்! மனோதிடத்தைக்கொடு” என ரியாஸ் பீட்டர் அழுது அழுது பிரார்த்தனை செய்தார்.

பின்னர் அபயமளித்த ஒரு நண்பரின் அறையில் வைத்தே பீட்டரை சில கிறிஸ்தவர்கள் பயங்கரமாகத் தாக்க சித்திரவதையின் உச்சத்திற்கே செல்கிறார் ரியாஸ். அந்நிலையிலும்- ”நீங்கள் தவறான பாதை யில் இருக்கிறீர்கள். உண்மையான மார்க்கம் இஸ்லாம் மட்டும்தான்” என அவர்களைப் பார்த்துக் கூறி னார்.

இத்தகைய இவரது துணிவும் துன்பமும் தியாகமும் - இஸலாத்தின் ஆரம்ப காலத்தில் புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய நபித்தோழர்கள் அனுபவித்த கொடுமைகளை நம் நினைவில் மோதவிடுகின்றன.

இத்தகைய சம்பவங்களையும் தான் இஸ்லாத்தை ஏற்றதன் காரணத்தையும் விளக்கி ரியாஸ் பீட்டர் ஒரு நூல் எழுதியுள்ளார். அதன் பெயர், முறிந்த சிலுவை. அதில் தனது ஈமான் - இறைநம்பிக்கையின் உறுதியை இவ்வாறு விவரிக்கிறார்: ”நான் முஸ்லிம் மக்களைப் பார்த்து இஸ்லாத்தைத் தழுவவில்லை. அப்படி வந்திருந்தால் நான் விரக்தியே அடைந்திருப்பேன். மாறாக இஸலாத்தை அதன் போதனைகள், பொன்நெறிகளைப் பார்த்தே தழுவி னேன்”

உண்மை சிதறித் திரிந்துபோன கிறிஸ்தவ சமயத்தைப் பின்பற்றும் ஒவ்வொரு சகோதரருக்கும், திசைமாறிக் கொண்டிருக்கும் ஒவ்வொரு முஸ்லிம் சகோதரருக்கும், சத்தியத்தைத் தேடி அலையும் அனைத்து உள்ளங் களுக்கும்- தனது சிறிய நூலை, ஒரு கலங்கரை விளக்கமாகவும் இஸ்லாத்தை மேலும் ஆழமாக அறியத்தூண்டும் தூண்டுகோலாகவும் சமர்ப்பிக்கிறேன் ” என்று கூறியுள்ளார்.

## حكم قصر الصلاة فى السفر، وما هى المسافة له ؟
## பயணத்தில் சுருக்கித் தொழுவதன் சட்ட விளக்கம்

قال الله تعالى : وَاِذَا ضَرَبْتُمْ فِى الاَرْضِ فَلَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ أَنْ تَقْصُرُوْا مِنَ الصَّلاَةِ اِنْ خِفْتُمْ أَنْ يَفْتِنَكُمُ الَّذِيْنَ كَفَرُوْا (سورة النساء ، الآية: ١٠١ )

குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்: ”மேலும் நீங்கள் பயணம் புறப்பட்டுச் சென்றால் சில தொழுகை களைச் சுருக்கித் தொழுவதில் உங்கள் மீது தவறேதுமில்லை. (குறிப்பாக) இறைநிராகரிப்பாளர்கள் உங்களுக்குத் தொல்லை கொடுப்பார்கள் என்று நீங்கள் அஞ்சினால் (தொழுகையைச் சுருக்கித் தொழலாம்) ஏனெனில் நிராகரிப்பாளர்கள் உங்களுக்கு வெளிப்படையான பகைவர்கள் ஆவர்” (5 : 101)

- சுருக்கித் தொழுவதன் கருத்து ளுஹர், அஸ்ர், இஷா ஆகிய தொழுகைகளை இரண்டு ரக்அத்-தாகச் சுருக்கித் தொழுவதாகும். பயணத்தில் அவ்வாறு சுருக்கித் தொழுவதற்கு அல்லாஹ் அனுமதி அளித்திருப்பது பற்றியே இந்த வசனம் எடுத்துரைக்கிறது.

فَاِنَّ النَّبِيَّ كَانَ اِذَا سَافَرَ صَلَّى رَكْعَتَيْنِ وَ لَمْ يُحْفَظْ عَنْهُ أَنَّهُ صَلَّى أَرْبَعًا فِى سَفَرٍ قَطُّ ( أخرجه البخارى)

நபி (ஸல்) அவர்கள் பயணத்தில் இரண்டு ரக்அத்-தாக தொழுதிருக்கிறார்கள். எந்தப் பயணத்திலும் அவர்கள் நான்கு ரக்அத்-தாக தொழவில்லை” (நூல்: புகாரி)

பயணத் தூரம் இத்தனை மைல்கள் இருக்க வேண்டும் என்கிற எந்த வரையறையும் இல்லை. மக்களின் நடைமுறையில் எத்தனை மைல்கள் செல்வது ஒரு பயணம் என்று கருதப்படுகிறதோ அந்தப் பயணத்தில் நான்கு ரக்அத்களை இரண்டு ரக்அத்-தாகச் சுருக்கித் தொழலாம். அது எத்தனை மைல் என்றாலும் சரியே! குறைவாக இருந்தாலும் கூடுதலாக இருந்தாலும் சரியே! இதுவே இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களின் முடிவாகும். மேலும் அவர்கள் சொல்கிறார்கள்: நெடிய தூரம் செல்லும் பயணம் - குறுகிய நேரத்தில் முடிந்தாலும் அது பயணமாகக் கருதப்படும். செல்வது குறுகிய தூரம் தான்., ஆனால் நீண்ட காலம் தங்குவதானால் அதுவும் பயணமே ஆகும். ஆக, பயணம் பற்றிய சட்ட நிலைகள் நான்கில் உள்ளடங்குகின்றன:

(1) நெடிய தூரம்., நீண்ட நேரம். இது **பயணம்** என்பதில் ஐயம் இல்லை. எடுத்துக்காட்டாக, உனைஸா **To** மக்கா பயணம் செய்து அங்கு 10 நாட்கள் தங்கியிருப்பது போன்று.

(2) குறுகிய தூரம்., குறுகிய பயணம். இது ***பயணமல்ல.*** எடுத்துக்காட்டாக, உனைஸா **To** புரைதா அல்லது அல்ரஸ் சென்று அரை மணிநேரத்தில் திரும்புவது போன்று.

(3) குறுகிய தூரம்., நெடிய காலம். எடுத்துக்காட்டாக உனைஸா **To** புரைதா சென்று மருத்துவ மனையில் இரண்டு மூன்று நாட்கள் தங்கியிருந்து சிகிச்சை பெற்று திரும்புவது போன்று! இது ஒரு **பயணமே** ஆகும்.

(4) நெடிய தூரம்., குறுகிய நேரம். எடுத்துக்காட்டாக உனைஸா **To** ஜித்தா சென்று அதே நாளில் திரும்புவது போன்று. இது **பயணம்தான்.** முறையான ஏற்பாடுகளுடனேயே இப்பயணத்தை மேற்கொள் வது பழக்கம் என்பதால் இரண்டு ரக்அத்-தாக சுருக்கித் தொழுவதற்கான பயணமாகவே இது கருதப் படும்.

பயணத்தில் இரண்டு ரக்அத்-ஆக சுருக்கியே தொழ வேண்டும். ஆனால் பயணியல்லாத ஒருவர் இமாமாக நின்று தொழுகை நடத்த - அவரைப் பின்பற்றித் தொழுதால் பயணியும் நான்கு ரக்அத்-தாகப் பூர்த்தியாக்கிட வேண்டும். நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்: "இமாம் நியமிக்கப்பட்டிருப்பது அவரைப் பின்பற்றுவதற்காகத்தான்" (நூல்: புகாரி, முஸ்லிம்)

ஓர் ஊரில் தொடர்ந்து எத்தனை நாட்கள் தங்கினால் பயணம் என்கிற நிலை மாறும்? இது விஷயத்தில் மத்ஹப்களின் கருத்தை முதலில் பார்ப்போம்.

(1)ஹன்பலி மத்ஹப்: நான்கு நாட்களுக்கு அதிகமாக அங்கு தங்கிட வேண்டும் என்று எண்ணினால் பயணம் என்கிற நிலை மாறிவிடும். நான்கு ரக்அத்-தாகவே தொழுதிட வேண்டும்.

(2) ஷா∴பிஈ மத்ஹப்: இந்த ஊரில் பிரவேசிக்கும் வெளியேறும் இரண்டு நாட்கள் உட்படி 6 நாட்கள் தங்குவதாக எண்ணினால் பயணம் என்கிற நிலை மாறிவிடும்.

(3) ஹனபீ மத்ஹப்: 15 நாட்கள் தங்குவதாக எண்ணினால் பயணம் என்கிற நிலை மாறிவிடும்.

(4) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் கருத்து: 19 நாட்களுக்கு மேல் தங்குவதாக எண்ணினால் பயணம் என்கிற நிலை மாறிவிடும்.

ஆனால் குர்ஆன்-ஹதீஸின் ஆதாரங்களின் அடிப்படையில் பார்த்தால் இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களின் கருத்தே சரியானதாகும். அதாவது, 4 நாட்களோ அல்லது அதற்கு அதிகமாகவோ எத்தனை நாட்கள் தங்கினாலும் அவர் பயணிதான். அல்லாஹ்வோ அவனுடைய தூதரோ அதற்கான நாட்களை வரையறுத்து நிர்ணயிக்கவில்லை" (நூல்: மஜ்மூஉல் ∴பதாவா)

ஆனால் நபி (ஸல்) அவர்கள் பல சூழ்நிலைகளில் பலவிதமாக தங்கியிருக்கிறார்கள். தபூக் யுத்தத் தின்போது அங்கு 20 நாட்கள் தங்கியிருக்கிறார்கள். தொழுகைகளைச் சுருக்கியே தொழுதார்கள். (நூல்: முஸ்னத் அஹ்மத், அபூ தாவூத், அப்துர் ரஸ்ஸாக், இப்னு ஹிப்பான், பைஹகி)

மக்கா வெற்றியின்போது மக்காவில் 19 நாட்கள் தங்கினார்கள். தொழுகைகளைச் சுருக்கியே தொழுதார்கள் (நூல்: புகாரி)

இறுதி ஹஜ்ஜின்போது நபியவர்கள் மக்காவில் தங்கியிருந்த 10 நாட்களில் தொழுகைளைச் சுருக் கியே தொழுதார்கள். அனஸ் (ரலி) அவர்களிடம் - நீங்கள் எத்தனை நாட்கள் மக்காவில் தங்கியிருந் தீர்கள்? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், 10 நாட்கள் தங்கியிருந்தோம் என்று பதில் அளித் தார்கள். மற்றோர் அறிவிப்பில் மக்காவில் 4 நாட்கள் தங்கியிருந்ததாக வந்துள்ளது. இந்த நான்கு நாட்களை - பிறகு மினா சென்று ஹஜ்ஜின் மீதிக் கிரியைகளை நிறைவேற்றி முடிக்கும் வரை தங்கி யிருந்த 6 நாட்களுடன் சேர்த்துச் சொன்ன கணக்காகும் இது. ஆக, நபி (ஸல்) அவர்கள் துல்ஹஜ் பிறை 4 இல் மக்காவுக்கு வந்து எல்லா கிரியைகளையும் முடித்துக்கொண்டு பிறை 14 இல் மதீனா திரும்பினார்கள். இந்த 10 நாட்களில் தொழுகைகளைச் சுருக்கியே தொழுதார்கள்.

இங்கு இன்னொன்றையும் புரிந்துகொள்ள வேண்டும். எல்லாத் தோழர்களும் பிறை 4 அன்றுதான் மக்காவுக்கு வந்தார்கள் என்பதில்லை. சிலர் பிறை 3 க்கு வந்திருக்கலாம். வேறு சிலர் அதற்கு முன்னரே - துல்கஅதா மாதத்திலும் ஷவ்வால் மாதத்திலும்கூட வந்திருக்கலாம். எனவே பிறை 4 க்கு முன்னர் வந்தவர்கள் தொழுகைகளைச் சுருக்கித் தொழக்கூடாது என்று நபியவர்கள் கூறியதாக எந்த அறிவிப்பும் இல்லை. எனவே நபி (ஸல்) அவர்கள் மக்காவில் 4 நாட்கள் தங்கியது என்பது தற்செய லாக நடந்ததாகும்.

உஸ்மான் (ரலி) அவர்கள் தங்களது ஆட்சிக்காலத்தின் ஆரம்ப ஆண்டுகளில் ஹஜ்ஜின்போது மினா வில் நான்கு ரக்அத் தொழுகைகளை இரண்டு ரக்அத்-தாக சுருக்கியே தொழுகை நடத்தினார்கள். பின் நாட்களில்தான் ஹஜ்ஜின்போது மினாவில் வைத்து நான்கு ரக்அத்-தாக தொழுகை நடத்தினார்கள். எனவே நான்கு நாட்களுக்கு மேல் தங்குபவர் பயணியாகக் கருதப்படமாட்டார் என்பதற்கு இதனை ஆதாரமாகக் கருத முடியாது.

ஏனெனில் கலீ∴பா உஸ்மான் (ரலி) அவர்களது இந்த செயலை ஸஹாபாக்கள் ஆட்சேபித்தார்கள். நபி (ஸல்)அவர்களும் அபூ பக்ர் (ரலி) அவர்களும் உமர்(ரலி) அவர்களும் இப்படிச் செய்யவில்லையே! இரண்டு ரக்அத்-தாக சுருக்கித்தானே தொழுகை நடத்தினார்கள்., நீங்கள் ஏன் 4 ரக்அத்-தாக தொழுகை நடத்துகிறீர்கள்? என்று சொன்னார்கள். ஆனால் உஸ்மான் (ரலி) அவர்கள் அவ்வாறு 4 ரக்அத்-தாக தொழுகை நடத்தியதற்கு தனிப்பட்டதொரு காரணம் இருந்ததாக அறிஞர்கள் - கல்வி யாளர்கள் கருதுகிறார்கள். என்ன அது? உஸ்மான் (ரலி) அவர்கள் அப்போது மினாவில் குடும்பத்துடன்

வசித்தார்கள். அதாவது அங்கு திருமணம் முடித்திருந்தார்கள். பயணி ஓர் ஊரில் தங்கி அங்கு திருமணம் முடித்தால் அல்லது அங்கு அவருக்கு மனைவி - மக்கள் இருந்தால் அவ்வூருக்குச் செல்லும் நாட்களில் அவர் 4 ரக்அத்-தாக தொழுதிட வேண்டும். இவ்வாறு நபி (ஸல்) அவர்களே கூறியிருப்பதாக ஆதாரப்பூர்வமான ஓர் அறிவிப்பில் கூறப் பட்டுள்ளது. எனவே உஸ்மான் (ரலி) அவர்களது செய்தது ஆதாரமாகாது. தொகுப்பு: அபூ காலித் உமரி

**ஷைக் முஹம்மத் பின் ஸாலிஹ்**
**அல் உஸைமீன் (ரஹ்) அவர்களின் நூலிலிருந்து எடுக்கப்பட்டது.**

# اهمية الامانة فى حياة المسلم

# அமானிதம் பேணும் பண்பு

அமானத் ஓர் அரபிச் சொல்லாகும். அது விரிவான பொருள்கொண்ட வார்த்தையாகும். நம்பி ஒப்படைக்கப்பட்டது என்பது இதன் அர்த்தம். அது பொருளானாலும் சரி, பொறுப்பானாலும் சரியே! மனிதர்களிடம் அல்லாஹ் ஒப்படைத்திருப்பவையும் அதில் அடங்கும். மனிதர்கள் ஒருவர் மற்றவரிடம் ஒப்படைப்பவையும் அடங்கும்.

நம்மிடம் ஒருவர் சில பொருட்களை ஒப்படைத்தால் அவர் கேட்கும்போது அவற்றைக் கொடுப்பதே அமானிதம் பேணுதல் ஆகும். அது வரையில் எவ்விதச் சேதாரமும் இல்லாமல் அவற்றைப் பாதுகாக்க வேண்டும். கடனாகப் பெற்ற பணத்தை சொன்ன நேரத்தில் திருப்பிக் கொடுப்பதும் அமானிதம் பேணுதலே. அமானித்தைப் பேணி வாழ்வது பற்றி திருக்குர்ஆனும் நபிமொழிகளும் எவ்வாறு அழுத்தமாக வலியுறுத்துகின்றன என்பதைச் சுருக்கமாகப் பார்ப்போம்.

அமானிதம் பேணுதல் என்பது ஈமான் எனும் இறைநம்பிக்கையின் தேட்டங்களில் மிக முக்கியமானது என்றும் அது பற்றி நாளை மறு உலகத்தில் அல்லாஹ் கேள்வி - கணக்கு கேட்பான் என்றும் குர்ஆன் சுட்டிக்காட்டுகிறது.

اِنَّ اللهَ يَأْمُرُكُمْ اَنْ تُؤَدُّوْا الْاَمَانَاتِ اِلَى اَهْلِهَا وَ اِذَاحَكَمْتُمْ بَيْنَ النَّاسِ اَنْ تَحْكُمُوْا بالْعَدْلِ اِنَّ اللهَ نِعْمَّا يَعِظُكُمْ بِهِ اِنَّ اللهَ كَانَ سَمِيْعًا بَصِيْرًا ( سورة النساء الآية: ٥٨)

(முஸ்லிம்களே!) அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான்: அடைக்கலப் பொருட்களை அவற்றிற்கு உரியவர்களிடம் ஒப்படைத்து விடுங்கள்., மேலும் மக்களிடையே தீர்ப்பு வழங்கினால் நீதத்துடன் தீர்ப்பு வழங்குங்கள். திண்ணமாக அல்லாஹ் உங்களுக்கு வழங்கும் அறிவுரை மிக உன்னதமானதாகும். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் செவியுறுபவன். உற்று நோக்குபவன் (4: 58)

முஸ்லிம்கள் ஒவ்வொருவரும் அதைக் கடைப்பிடித்து வாழ்வது அவசியம். உள்ளத்தில் ஈமான் உள்ளதென்பதற்கு இது ஆதாரம் மட்டுமல்ல நிபந்தனையாகவும் உள்ளது! அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

قال النبي ﷺ : لا اِيْمَانَ لِمَنْ لاَ اَمَانَةَ لَهُ وَلاَ دِيْنَ لِمَنْ لاَ عَهْدَ لَهُ (رواه أحمد)

எவரிடத்தில் அமானிம் பேணுதல் இல்லையோ அவரிடம் ஈமான் - நம்பிக்கை என்பதில்லை. மேலும் எவரிடம் வாக்குறுதி பேணுதல் இல்லையோ அவரிடம் தீன் - இறைமார்க்கம் இல்லை" (நூல்: முஸ்னத் அஹ்மத்)

கருணைமிக்க இறைவனின் அன்புக்குரிய நல்லடியார்களின் உயர் பண்பு என்று ஓரிடத்தில் திருக் குர்ஆன் சுட்டிக் காட்டுகிறது:

قال الله تعالى : وَالَّذِيْنَ هُمْ لِاَمَانَاتِهِمْ وَ عَهْدِهِمْ رَاعُوْنَ (سورة المؤمنون الآية: ٨)

மேலும் அவர்கள் எப்படிப்பட்டவர்கள் எனில், தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட அமானிதங்களையும் தாங்கள் கொடுத்த வாக்குறுதிகளையும் பேணிக்காப்பவர்களாய் இருப்பார்கள் (23 : 8)

நபிமொழிகளில் அமானிதம் எவ்வாறு வலியுறுத்தப்பட்டுள்ளதெனில், அதைக் கடைப்பிடித்து வாழ்ந்தால் சொர்க்கம் அழைத்துச் செல்வதற்கு நபியவர்கள் பொறுப்பேற்கிறார்கள். அத்தகைய பொறுப்பான உயர் பண்பு எனப் புகழப்பட்டிருக்கிறது:

عن عبادة بن الصامت قال قال رسول الله ﷺ : اِضْمَنُوْا لِى سِتًّا مِنْ اَنْفُسِكُمْ اَضْمَنُ لَكُمُ الْجَنَّةَ ، اصْدُقُوْا اِذَاحَدَّثْتُمْ ، وَاَوْفُوْا اِذَا وَعَدْتُّمْ ، وَاَدُّوْا اِذَا اؤْتُمِنْتُمْ ، وَ غُضُّوْا اَبْصارَكُمْ ، وَاحْفَظُوْا فُرُوْجَكُمْ . وَكُفُّوْا اَيْدِيَكُمْ (رواه أحمد)

நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: ஆறு பண்புகளைப் பேணி வாழ்வதற்கு நீங்கள் என்னிடம் பொறுப்பு கொடுங்கள்., சொர்க்கம் செல்ல நான் உங்களுக்குப் பொறுப்பேற்றுக்கொள்கிறேன். பேசினால் உண்மையே பேசுங்கள்., வாக்குறுதி கொடுத்தால் நிறைவேற்றுங்கள்., பொருட்களோ பொறுப்புகளோ உங்களிடம் ஒப்படைக்கப்பட்டால் அவற்றைப் பேணிப்பாதுகாத்திடுங்கள்., உங்கள் பார்வைகளைத் தாழ்த்துங்கள்., உங்கள் வெட்கத்தலங்களைப் பாதுகாத்து வாருங்கள்., மேலும் உங்கள் கைகளைப் பிறருக்குத் தீங்கிழைப்பதிலிருந்து தடுத்துக்கொள்ளுங்கள் " (நூல்: அஹ்மத்)

## அந்த அளவுக்கு
## ஒரு நல்ல சமுதாய அமைப்பு!

## من محاسن الاسلام (لغة تاميل)

சமூக நீதி என்பது இந்தியாவில் எல்லோருக்கும் கிடையாது. மனிதனைத் தலையில் பிறந்தவன், தோளிலே பிறந்தவன், வயிற்றிலே பிறந்தவன், காலிலே பிறந்தவன், எதிலும் பிறக்காத - மனிதர்களாகக் கருத முடியாத நீசர்கள் மிலேச்சர்கள், துஷ்டர்கள், சண்டாளர்கள் என்று ஒதுக்கி வைத்திருக்கிற ஒரு சமுதாயத்திலே நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இதைச் சொல்லாமலே சமூகநீதி பற்றி பேசுவது எனக்கு நியாயமாகப்படவில்லை.

இந்தியாவில் உள்ள இஸ்லாமியர்கள் எல்லாம், இங்குள்ள கிறிஸ்தவர்கள் எல்லாம் எங்கிருந்தோ வந்தவர்களல்ல. இங்கேயே பிறந்து வளர்ந்து வாழும் நாட்டின் குடிமக்கள்., மண்ணின் மைந்தர்கள்.

கம்யூனிஸ்டுகள் மதத்தைப் பற்றிய கருத்துகளைத் தவறாகக் கூறி வந்திருக்கிறார்கள் என்பதை நான் கம்யூனிஸ்டாக இல்லாதபோதுதான் தெரிந்துகொண்டேன். சுமார் 30 ஆண்டுகள் கம்யூனிஸ்டு கட்சியில் மிகத் தீவிரமாகச் செயல்பட்டுவந்தவன் நான். மார்க்சியப் புத்தகங்களைக் கரைத்துக் குடித்து அது தான் உலகம், அதுதான் நியாயம், அதுதான் விஞ்ஞானம், அதைத் தவிர உலகில் வேறு எதுவும் இல்லை என்று எனக்கு மார்ச்சீய ஆசான்கள் கற்றுக்கொடுத்தது தவறு என்பதை அந்த இயக்கத்தில் இருந்து வெளியேறி **மக்கள் உரிமைக் கழகம்** எனும் அமைப்பை ஆரம்பித்த பிறகுதான் நான் தெளிவு பெற முடிந்தது.

மதம் ஒரு அபின் என்று மார்க்ஸ் சொன்னதாக எங்களுக்குக் கற்பிக்கப்பட்டது. ஆனால் அதற்கு முன்பாக மார்க்ஸ் இரண்டு கருத்துகளைச் சொல்லியுள்ளார். அதை கம்யூனிஸ்டு ஆசான்கள் மறைத்து விட்டார்கள்.

- ஆன்மீகம் இல்லாத மனிதனுக்கு மதம் ஆன்மீகமாக இருக்கிறது
- இதயம் இல்லாத மனிதனுக்கு மதம் இதயமாக இருக்கிறது! என்று

கூறியவர், கடைசியாகத்தான் மதம் அபினாகவும் இருக்கிறது என்றார்.

கம்யூனிஸ்ட் என்பவன் உண்மையான கம்யூனிஸ்டாக - அர்ப்பணிக்கும் உணர்வோடு வாழ வேண்டும். ஒரு மெழுகுவர்த்தி எப்படி தன்னையே உருக்கிக்கொண்டு பிறருக்கு ஒளி தந்து ஒன்றுமில்லாமல் போகிறதோ அப்படி வாழ்பவன்தான் கம்யூனிஸ்ட்.

இன்றைக்கு கம்யூனிஸம் இந்தியாவில் வரவில்லை என்றால், வந்த இடத்திலும் போய் விட்டது என் றால் அதற்குக் காரணம் கம்யூனிஸ்டுகள் கம்யூனிஸ்டுகளாக இல்லை.

அதேபோல இஸ்லாமியர்களும் உண்மையான, முழுமையான இஸ்லாமியர்களாக இருக்க வேண்டும் என்பது எனது வேண்டுகோள். ஏனெனில் அதில் மிகச் சிறந்த கருத்துகள் உள்ளன. மார்க்ஸ் என்ன சொல்லி இருக்கிறாரோ, கம்யூனிய தத்துவங்கள் என்ன சொல்கின்றனவோ அவை ஒரு மதத்தில் - இஸ்லாத்தில் வாழ்க்கை நெறியாகவே சொல்லப்பட்டுள்ளன.

- உழைப்பவனின் வியர்வை உலர்வதற்கு முன்னால் அவனது கூலியைக்கொடுத்து விட வேண்டும்.
- அடுத்த வீட்டுக்காரனுக்குச் சாப்பாடு இருக்கிறதா இல்லையா என்று பார்த்து விட்டு நீ சாப்பிடு

இப்படி பல அறிவுரைகள்

நான் திருப்பத்தூர், வாணியம்பாடி, உமராபாத் போன்ற பகுதிகளில் பல ஆண்டுகள் வாழ்ந்தவன். திருமணம் போன்ற நிகழ்ச்சிகளில் வீண் ஆடம்பரமோ, பகட்டோ இருக்கக்கூடாது என்பதற்காக அந்த அந்த ஊர் ஜமாஅத்கள் விதித்திருக்கும் கட்டுப்பாடுகளை அறிந்து வியந்தவன்.

இந்தக் கட்டுப்பாடுகளை எதிர்த்து வழக்குத்தொடுக்க வேண்டும் என்று ஒரு முஸ்லிம் பிரமுகர் என்னை அனுகியபோது நான் அதை மறுத்தேன். பணக்காரன் தன் பணக்கொழுப்பைக் காட்டும் வகை யில் மேடை அலங்காரமோ, பந்தாவோ கூடாது என்பது நல்ல விஷயம்தானே! ஒரு சோசலிச நாட்டில் தான் இப்படி ஒருநிலையைப் பார்க்க முடியும். ஆகவே வழக்கு தேவையில்லை., கூடாது என்று சொல்லி அவரை அனுப்பி வைத்தேன்.

ஒரு முஸ்லிம் தவறு செய்தால் நான் அவரைப் பார்த்து, போலீசுக்குப் பயப்படுங்க, சட்டத்துக்குப் பயப்படுங்க, கோர்ட்டுக்குப் பயப்படுங்க, அடியாளுக்குப் பயப்படுங்க என்றெலல்லாம் சொல்ல மாட்டேன். ஐயா, நீங்கள் இறைவனுக்குப் பதில் சொல்லக்கூடியவர்தானே! குர்ஆனைப் படித்தவர்தானே! நீங்கள் இந்த அநியாயத்தைச் செய்யலாமோ என்று கேட்பேன். அவர் பதிலே பேசமாட்டார். சரிங்க, இந்தத் தவறு இனி நடக்காமல் நான் பார்த்துக்கொள்கிறேன் என்று சொல்வார். **அந்த அளவுக்கு ஒரு நல்ல சமுதாய அமைப்பு!**

இதுபோல ஒரு சமுதாய மாற்றம் ஏற்படாத வரை சமூக நீதி மலர முடியாது. இதைத்தான் மார்க்சும் சொன்னார். மார்க்சீயம் ஒரு விஞ்ஞானக் கோட்பாடு. ஆகவே சமுதாயத்தில் ஓர் அடிப்படையான மாற்றம் உருவாக வேண்டும். அதற்காக நாம் எல்லாம் உழைக்க வேண்டும். அப்போதுதான் சமூக நீதி யைப் பெற முடியும். - **சமூக நீதி மாநாட்டில் வழக்கறிஞர் பக்தவச்சலம் ஆற்றிய உரையில் இருந்து ...**

**முஹம்மது நபி குறித்து**
**உலக அறிஞர்களின் கருத்துகள்**

**قالوا عن محمد صلى الله عليه وسلم**

# “இஸ்லாம் ஐரோப்பா கண்டத்தில் இன்னும் அதிகமாகப் பரவும்”

**அறிஞர் பெர்னாட்ஷா (முஹம்மது எனும் தமது நூலில்) கூறுகிறார்:**

இந்த உலகம் முஹம்மதைப்போன்ற ஒரு சிந்தனையாளரின் பக்கம் மிகவும் தேவையுடையதாக உள்ளது. தாம் போதித்த இறைமார்க்கத்தை எப்பொழுதும் கண்ணியத்திற்குரிய இடத்திலேயே இந்த நபி வைத்துள்ளார். இவரது மார்க்கம் உலகிலுள்ள அனைத்து நாகரிகங்களையும் வென்று ஏனைய எல்லா மதங்களை விடவும் சிறப்புக்கும் கண்ணியத்திற்கும் உரியதாகவே காலாகாலத்திற்குத் திகழும். எனது சமுதாய மக்களில் பெரும்பாலோர் தெளிவான ஆதாரத்துடன் இம்மார்க்கத்தில் இணைந்து விட்டனர். ஐரோப்பா கண்டத்தில் இந்த மார்க்கம் இன்னும் அதிகமாகப் பரவும்.

மேலும் அவர் கூறுவதாவது: மதவெறி அல்லது அறியாமையின் காரணமாக மத்திய நூற்றாண்டில் மதவாதிகள் முஹம்மது நபியின் மார்க்கத்திற்கு இருள்படர்ந்த - தெளிவற்ற வடிவத்தைக் கொடுத்தனர். **முஹம்மது நபியை கிறிஸ்தவத்திற்கு எதி ரானவராகக் கருதினார்கள்.** ஆனால் அவர் கூறும் கருத்துகளை நான் ஆராய்ந்தபோது அவர் திகைப்பிற்கும் ஆச்சரியத்திற்கும் உரியவராக இருப்பதைக் காண முடிந் தது. அதுமட்டுமல்ல, **அவர் கிறிஸ்தவத்திற்கு எதிரானவர் அல்லர்** என்ற முடிவுக்குத்தான் என்னால் வரமுடிந்தது. உண்மையைச் சொல்வதானால், அவர் மனித சமுதாயத்தை மீட்கக்கூடியவர் என்று தான் சொல்ல வேண்டும். இவ்வுலகத்தின் ஆட்சிப் பொறுப்பை அவர் எற்றுக்கொண்டால் நம்மைச் சூழ்ந்துள்ள இன்றைய பிரச்னைகளுக்கு அவரால் நிச்சயம் தீர்வு காணமுடியும். மேலும் இன்று மனித சமுதாயம் ஏங்கிக் கொண்டிருக்கும் அமைதி யையும் நற்பாக்கியத்தையும் அவரால் வழங்கிட முடியும்.

**நோபல்பரிசு பெற்ற ஆங்கிலேய தத்துவஞானி தாமஸ் கார்லைல்** (Thomas Carlyle) பெருந் தலைவர்கள் (HEROES) எனும் தமது நூலில் கூறுகிறார்:

இஸ்லாம் போலியானது என்றும் முஹம்மது போலியானவர், ஏமாற்றுக்காரர் என்றும் கூறப்படுவதை இன்றைய காலத்தில் ஒருவர் செவியேற்பது மிகப்பெரிய இழிவாகும். இதுபோன்ற அபத்தமான - வெட்கக் கேடான கருத்துகள் பரப்பப்படுவதற்கு எதிராக நாம் போராட வேண்டும். அந்த இறைத்தூதர் கொண்டு வந்த தூதுச்செய்தி பன்னிரண்டு நூற்றாண்டகளாக ஏறத்தாழ இருபது கோடி மக்களுக்கு ஒளி வீசும் விளக்காகவே திகழ்ந்து வருகிறது. எண்ணிலடங்காத இத்தனை கோடி மக்கள் எந்தத் தூதுச்செய்தியை ஏற்று வாழ்ந்து மடிந்தார்களோ அந்தத் தூதுச்செய்தி பொய்யானனது, மோசடியானது என்று உங்களில் யாரும் நினைத்துப்பார்க்க முடியுமா?

**இந்திய தத்துவஞானி ராமகிருஷ்ண ராவ் கூறுவதாவது:**

முஹம்மது தோன்றியபோது அரேபியத் தீபகற்பம் என்பது வெளியில் சொல்லிக்கொள்ளும் அளவுக்குச் சிறந்து விளங்கவில்லை. இத்தகைய பாலைவனத்தில் இருந்துகொண்டுதான் முஹம்மது தமது மகத் தான ஆற்றலால் புதிய உலகையும் புதிய வாழ்வையும் புதிய கலாசாரத்தையும் நாகரிகத்தையும் உரு வாக்க முடிந்தது. மேலும் (மொரோக்கோ நாட்டின்) மராகிஷ் நகரில் இருந்து இந்திய துணைக் கண்டம் வரையில் பரந்து விரிந்திருக்கும் அளவுக்கு புதிய ராஜியத்தையும் உருவாக்க முடிந்தது. இன் னும் ஆசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா ஆகிய மூன்று கண்டங்களிலும் புதிய சிந்தனையையும் புதிய வாழ்க்கை முறையையும் அவரால் ஏற்படுத்த முடிந்தது!

**கனடாவைச் சேர்ந்த சுவைமர் என்ற அறிஞர் கூறுகிறார்:**

முஹம்மது மாபெரும் ஆன்மீகத் தவைலர் என்பதில் சந்தேகமில்லை. மேலும் அவர் ஓர் ஆற்றல்மிக்க சீர்திருத்த வாதி யாகவும் தூயமொழியில் பேசக்கூடிய சிறந்த பேச்சாளராகவும் துணிச்சல் மிக்க ராணுவ வீரராகவும் மாபெரும் சிந்தனை யாளராகவும் திகழ்ந்தார். இத்தகைய தன்மைகளுக்கு முரணான வேறு தன்மைகளை நாம் அவருக்குக் கற்பிப்பது கூடாது. இப்படிச் சொல்வதுதான் சரி என்று அவரது வர லாறும் அவர் கொண்டுவந்த குர்ஆனும் சான்று பகர்கின்றது.

**சர் வில்லியம் மூர் (Sir William Muir) கூறுவதாவது:**

முஸ்லிம்களின் நபி முஹம்மது அவர்கள், சிறு வயது முதல் அவரது ஊர் மக்களால் ஏகோபித்த முறையில் நம்பிக்கைக்குரியவர் எனும் சிறப்புப் பெயர் சூட்டப்பட்டார். இத்தகைய சிறப்பிற்கு அவரது அழகிய குணமும் நன்னடத்தையும்தான் காரணம். எது எப்படியானாலும் புகழ்ந்துரைப்பவர்களின் புகழை விடவும் அவர் உயர்ந்தவர்தான். அவரைப் பற்றி அறியாதவர்களுக்கு அவரது சிறப்பு தெரியாதுதான். சிறப்புக்குரிய அவரது வரலாற்றை நன்கு ஆய்வு செய்தவர்கள்தான் அவரை நன்கு அறிவார்கள். இறைத்தூதர்களின் வரிசையிலும் உலகச் சிந்தனையாளர்களின் வரிசையிலும் அவருக்கு முதலிடத்தைக் கொடுத்திருப்பது அந்த வரலாறுதான்!

மேலும் அவர் கூறுவதாவது, முஹம்மது தமது தெளிவான பேச்சாலும் எளிமையான மார்க்கத்தாலும் தனித்துவம் பெற்றுத் திகழ்கிறார். சிந்தையைத் திகைக்கவைக்கும் அளவுக்கு பெரும் பணிகளை யெல் லாம் அவர் செய்து முடித்துள்ளார். இஸ்லாமியர்களின் நபி முஹம்மது செய்ததைப்போல உறங்கிக் கொண்டிருந்த மனிதர்களைத் தட்டி எழுப்பி நற்குணங்களை உயிர்ப்பித்து குறுகிய காலத்தில் நற்குணத் தின் சிறப்பு அந்தஸ்தை உயர்த்திக் காட்டிய சீர்திருத்தவாதியை உலக வரலாறு கண்டதில்லை!

**நோபல் பரிசு பெற்ற ரஷிய தத்துவ ஞானி லியோ டால்ஸ்டாய் (Leo Tolstoy) கூறுகிறார்:**

முஹம்மது நபியின் பெருமைக்கு இதுவே போதுமானதாகும். அதாவது, கேடுகெட்ட இழிந்த சமுதா யத்தை ஷைத்தான்களின் கரங்களிலிருந்தும் இழிவான பழக்கங்களிலிருந்தும் அவர் விடுவித்து வளர்ச் சிக்கும் முன்னேற்றத்திற்குமான பாதையை அவர்களுக்கு வகுத்துக் கொடுத்தார். முஹம்மது கொண்டு

வந்த மார்க்கம் அறிவுக்கும் விவேகத்திற்கும் பொருத்தமாக இருப் பதால் உலகம் முழுவதும் அது பரவியே தீரும்.

**நம்ஸாவி ஷப்ரிக் (Austria) என்பவர் கூறுகிறார்:**

மனித சமுதாயம் முஹம்மதைப் போன்ற ஒரு மனிதரைத் தன்னுடன் இணைத்துச் சொல்வதற்குப் பெருமைப்படுகிறது. காரணம் என்னவெனில், அவர் எழுதப்படிக்கத் தெரியாதவராக இருந்தும் பத்து நூற்றாண்டுகளுக்கு முன்பு எத்தகைய சட்ட திட்டங்களை வகுத்து அளிக்க அவரால் முடிந்துள்ள தெனில், ஐரோப்பியர்களாகிய நாம் இதுபோன்ற சட்ட நெறிகள் முழுவதையும் அடையும் பட்சத்தில் முன்னைவிட அதிக பாக்கியத்திற்கு உரியவர்களாய் நிச்சயம் திகழ்ந்திருக்க முடியும்!

## ஒரு வாசகரின் கேள்விக்கு
## துக்ளக் சோவின் குழப்பமான பதில்

துக்ளக் (7-6-2007) இதழில் புதுக்கோட்டையைச்சேர்ந்த தஜம்முல் முஹம்மது என்பவர் துக்ளக் சோ அவர்களிடம் ஒரு கேள்வி கேட்டுள்ளார். அந்தக் கேள்வி - பதில் வருமாறு:

கே: துக்ளக் ஆசிரியர் அவர்களே! தாங்கள் துக்ளக் இதழில் ஓரிடத்தில் ஹிந்துக் கடவுள்கள் மட்டும் இல்லை என்று சொன்னால் அதனால் ஒரு பிரச்சினையும் இல்லை என்று கூறியுள்ளீர்கள். அப்படியானால் மதவாரி யாகத்தான் கடவுள்கள் இருக்கின்றனர் என்று நீங்கள் நம்புகிறீர்களா?

ப: ஹிந்துக்கள் நம்புகிற கடவுள்கள், மற்றவர்களைப் பொறுத்தவரையில் ஹிந்து கடவுள்கள். ஆனால் நீங்கள் சொல்வதுபோல மதவாரியாக கடவுள்கள் இருப்பதாக ஒருகருத்து இருப்பதால்தான்- அல்லாஹ்வை நம்பாதவர்கள், கடவுள் நம்பிக்கை அற்றவர்கள் என்பது போன்ற நம்பிக்கைகள் ஏற்பட்டு விட்டன.

மதவாரியாக கடவுள் இருக்க முடியுமா? என்று கேள்வி மிகத் தெளிவாக இருக்கிறது. ஆனால் சோ அளித்துள்ள பதிலில் - அடிக்கடி சொல்வது போல குழப்பம்தான் இருக்கிறது.

ஹிந்துக்கள் நம்புகிற கடவுள்கள் மற்றவர்களைப் பொறுத்தவரை ஹிந்துக் கடவுள்கள் என்கிறார். வாசகரின் கேள்வியே அது சரியா என்பதுதானே!

ஹிந்துக்களைப் படைத்தது ஒரு கடவுள்., கிறிஸ்தவர்களைப் படைத்தது வேறோரு கடவுள்.,முஸ்லிம்களைப் படைத்தது இன்னொரு கடவுள் என்றெல் லாம் இருக்க முடியுமா?

சோ அவர்களின் பதிலில் நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய ஒரு செய்தி இருக்கிறது. மதவாரியாக கடவுள்கள் இருப்பதாக ஒருகருத்து இருப்ப தால்தான் அல்லாஹ்வை நம்பாதவர்கள் கடவுள் நம்பிக்கை அற்றவர்கள் என்பது போன்ற நம்பிக்கைகள் ஏற்பட்டுவிட்டன. - இது சோ அளித்துள்ள பதில் வாசகம். இதில் நமக்கு ஒரு செய்தி இருக்கிறது.

அதாவது, ஹிந்துக்களுக்கென்று கடவுள்கள் இருப்பதுபோல முஸ்லிம் களுக்கும் தனிக்கடவுள் இருக்கிறது., அந்தக் கடவுளின் பெயர் அல்லாஹ்., முஸ்லிம்களின் கடவுளாகிய அல்லாஹ்வை நம்பாத மக்கள் கடவுள் நம்பிக் கையே இல்லாதவர்கள் எனும் நம்பிக்கை முஸ்லிம்களிடம் ஏற்பட்டு விட்டது என்கிறார்.

வேறு யாரோ சாதாரண மனிதர் ஒருவர் இப்படிச்சொல்லியிருந்தால் அதில் வியப்படைய ஒன்றுமில்லை. ஆனால் சோ, வேதங்களையும் உபநிஷத்துகளை யும் நன்கு கற்றுத் தேர்ந்தவர். அபாரமான வேத அறிவு பெற்றவர். இப்படிப் பெற்றிருந்தும்கூட கடவுள் விஷயத்தில் சோவுக்கு ஏன் இத்தனைக் குழப்பம்?

ஒரு வாசகரின் எளிய கேள்விக்கு வேத அறிவு நிரம்பப் பெற்ற ஆசிரியரின் பதில் இப்படித்தான் இருந்திருக்க வேண்டும்:

ஆமாம் வாசகரே! நீங்கள் சொல்வதுதான் சரி. மதவாரியாக கடவுள்கள் இருப்பதற்கு வாய்ப்பே இல்லை. இறைவன் ஒருவன்தான், என்றல்லவா உறுதி படக் கூறியிருக்க வேண்டும்.

அல்லாஹ்வை நம்பாதவர்கள் கடவுள் நம்பிக்கை அற்றவர்கள் என்பது போன்ற நம்பிக்கை ஏற்பட்ட விட்டது என்கிறார்.

இப்படி ஒரு பதில் வரக் காரணம் என்ன?

அல்லாஹ் என்பது குறிப்பிட்ட இனத்திற்கோ மதத்திற்கோ மட்டும் சொந்த மான கடவுள் என்ற கருத்து அறிந்தோ அறியாமலோ அவரது மனதில் பதிந்தி ருக்க வேண்டும். அதன் வெளிப்பாடுதான் இப்படி ஒரு பதில்!

அல்லாஹ் என்பது ஓர்அரபுச்சொல்., ஆங்கிலத்தில் **God** இந்தியில் பகவான் பாரசீக மொழியில் ஹுதா என்பதுபோல அரபு மொழியில் அல்லாஹ் என்கி றார்கள். இதைத் தமிழில் இறைவன் அல்லது கடவுள் என்று சொல்லலாம்.

இப்போது சோ அவர்கள், பயன்படுத்தியுள்ள அல்லாஹ் என்ற சொல்லைத் தமிழிப்படுத்தி அந்த வாக்கியத்தைப் படித்துப் பாருங்கள்:

கடவுளை நம்பாதவர்கள் கடவுள் நம்பிக்கை அற்றவர்கள் என்பது போன்ற நம்பிக்கைகள் ஏற்பட்டுவிட்டன.

இந்தச் சொற்றொடரில் ஏதேனும் பொருள் இருக்கிறதா?

கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களை வேறு எப்படிக் குறிப்பட வேண்டும் என்று சோ விரும்புகிறார்?

பரந்த ஞானமும் விரிந்த பார்வையும் கொண்ட சோ அவர்களிடம் ஒரே ஒரு கேள்வி:

உங்களை ஹிந்துக் கடவுள்களும் என்னை முஸ்லிம் கடவுளும்தான் படைத்தார்கள் என்று நீங்கள் உண்மையிலேயே நம்புகிறீர்களா?

இந்தக் கேள்விக்கு ஆம் என்பதுதான் உங்கள் பதிலாக இருக்குமானால் வேதங்களின் உயிரோட்டம் - அசலான தாத்பரியம் இன்னும் உங்களுக்குப் பிடிபடவில்லை என்றுதான் பொருள். வேதத்தின் உண்மைப் பொருளைத் தேடி மீண்டும் உங்கள் பயணத்தைத் தொடக்கப் புள்ளியிலிருந்தே ஆரம்பிக்க வேண்டும்.

இந்தக் கேள்விக்கு இல்லை என்பது உங்கள் பதிலாக இருக்குமானால் உங்களையும் உன்னையும் படைத்த அந்த ஏக இறைவனுக்கே அடிபணிந்த வாழ வேண்டும். என்ன செய்யப் போகிறீர்கள், சோ அவர்களே!

## امرأة هالندية اعتنقت الاسلام بامريكا (لغة تاميل)

## அமெரிக்காவில் இஸ்லாத்தைத் தழுவிய ஹாலந்து நாட்டுப் பெண்மணி

ஹாலந்து நாட்டைச்சேர்ந்த 16 வயது கிறிஸ்தவப் பெண்! கிறிஸ்தவ மதத்தின் குழப்பமான இறைக் கொள்கையால் அவளது மனம் நிறைவடையவில்லை. எனவே அந்த மதத்தில் இருந்து வெளியேறவே துடித்தாள்! புத்தம், ஹிந்து, சீக்கியம் என ஒவ்வொரு மதமாக மாறினாள். ஆனாலும் எந்த மதமும் அவளது அறிவின் தேட்டத்திற்கு மனநிறைவு அளிக்கவில்லை.

**இஸ்லாம்** என்றொரு **வாழ்க்கை நெறி** உண்டு என்பதே அவளுக்குத் தெரியாது. மதங்களைப் பற்றி படித்தபோது முஸ்லிம்கள் என்ற பெயரில் இங்கும் அங்கும் சிலர் இருப்பதாகவும் அவர்கள் பயங்கர வாதிகள் என்று பெயர் குத்தப்பட்டிருப்பதும் தெரிந்தது. அதிலும் முஸ்லிம் பெண்கள் தங்கள் கணவன் மார்களுக்கு அடிமைப்பட்டு வாழ்வதாகவும் கேள்விப்பட்டிருக்கிறாள். அவ்வளவுதான்!

இவையெல்லாம் உண்மையாக இருக்குமா என்று சிந்திக்கத் தொடங்கிய கொரினுக்கு (அவளது பழைய பெயர் அதுதான்) உண்மையை அறிய வேண்டும் என்ற ஆவல் எழுந்தது.

வேலை நிமித்தமாக அமெரிக்காவுக்குப் பயணமானாள். ஒரு மருத்துவமனையில் வேலை! அங்கு வேலை செய்த பாகிஸ்தான் வாலிபர் ஒருவரின் அறிமுகம் ஏற்பட்டது. அவரது பெயர் **குல்ஃபம்.** அடக்க மானவர், அழகிய தோற்றமும் மெதுவாகப் பேசும் நளின சுபாவமும் உடையவர். அதனால் எல்லோரும் அவரை நேசித்தார்கள். கொரினின் இதயத்திலும் அவர் இடம் பிடித்ததில் வியப்பில்லை.

ஒரு நாள் **முஸல்லா** ஒன்றை கொரினுக்கு அன்பளிப்பு செய்தார். அதை வாங்கி தனது அறையில் அழகுக்காகத் தொங்கவிட்டார் கொரின். இதை ஏன் அன்பளிப்பு செய்தார்? அந்த ஆளுக்கு வேறு எந்தப் பொருளும் கிடைக்க வில்லையா? பொறி தட்டியதுபோன்ற ஒரு சிந்தனை கொரினுக்கு!

அவரைப்போல் இன்னும் சிலரும் அங்கு இருந்தனர். முஸ்லிம்கள் என்றால் தீவிரவாதிகள் என்று நாம் படித்தோமே! நாம் படித்தது குரோதத்தால் எழுதப்பட்ட செய்தியா?

இவ்வாறான சிந்தனையுடன் லீவில் தனது நாடு **ஹாலந்து** திரும்பினார் கொரின்! அங்கு இஸ்லாத் தின் இறைவேதமாகிய திருக்குர்ஆன் வாங்கி படிக்கத் தொடங்கினார். பிறகு ஒரு மாத லீவுக்குப் பிறகு அமெரிக்கா திரும்பினார். அங்கு வேலை மாற்றம் காத்திருந்தது. கேன்டீனில் பணி. அது **ரமளான் மாதம்.** அதனால் முஸ்லிம்கள் யாரும் சாப்பிட வர வில்லை. விடுப்பில் செல்லும் முன் சந்தித்த முஸ்லிம் யாரை யும் காணோம். கொரினுக்கு ஒரே வியப்பு!

என்ன நோன்பு இது? பகல் முழுவதும் உணவு-பானம் இன்றி இவர்களால் எப்படி இருக்க முடிகிறது? முஸ்லிம்களின் இந்தப் பொறுமை என்னை வியக்க வைத்தது என்று எழுதுகிறார் பின்னாட்களில் ஷாஹீன் என்று மாறிய கொரின்! அவர் மேலும் எழுதுகிறார்: நான் அமெரிக்காவில் மருத்துவ மனையில் வேலை பார்த்தபோது எனது கல்வித் தரத்தை உயர்த்திக் கொள்வதற்காக அங்குள்ள பல்கலை கழகத்தில் சேர்ந்து உயர் கல்வியைத் தொடர்ந்தேன். **அரபி மொழியையும் இஸ்லாமியப் பண்பாட்டையும்** சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்தேன்.

அந்நாட்களில்தான் **குல்ஃபம்** என்ற பாகிஸ்தானியின் தொடர்பு ஏற்பட்டது. முதல் சந்திப்பின்போது உனது பெயர் என்ன? என்று ஆங்கிலத்தில் அவர் கேட்டார். நான் - எனது பெயர் **கொரீன்** என்று அரபியில் எழுதிக்காட்டினேன். அன்று முதல் அவர் எனக்கும் நான் அவருக்கும் பழக்கம் ஆனோம். இஸ் லாத்தின் அடிப்படையான ஓரிறைக்கொள்கை (தவ்ஹீத்) பற்றியும் தூய்மை, தொழுகை போன்ற கடமை கள் பற்றியும் அவர் மூலமே நான் கற்றுக்கொண்டேன்.

1976 ஆம் ஆண்டு நான் **இஸ்லாத்தைத் தழுவினேன்.** எனக்கு இஸ்லாத்தை அறிமுகம் செய்து வைத்த குல்ஃபமையே கணவராக தேர்வுசெய்து கொண்டேன். அன்று முதல் எனது பெயர் **ஷாஹீன்** ஆனது. தனக்கு 3 குழந்தைகள் பிறந்த பிறகு -தான் ஒரு தாய், குடும்பத் தலைவி எனும் பொறுப்புகள்

வந்த பின்னர், இஸ்லாத்தின் மீதான பற்றும் பிற மக்களிடம் அதனைப் பரப்ப வேண்டும் என்கிற ஆர்வமும் எனக்கு ஏற்பட்டது என்கிறார் ஷாஹீன் குல்ஃபம்!

முதலில் என் பெற்றோர் நான் இஸ்லாம் மதத்தில் சேர்ந்ததை விரும்பவில்லை. ஆனால் எனது இஸ்லாமிய ஒழுக்கத்தையும் கணவர் -குழந்தைகளுடன் பற்றோடும் பாசத்துடனும் நான் நடந்து கொள் வதையும் கவனித்து பின்னாட்களில் அவர்களும் இஸ்லாத்தில் சேர்ந்தார்கள் என்று பெருமையுடன் குறிப்பிடுகிறார் ஷாஹீன்!

தன் வாழ்க்கையில் நடந்த ஒரு நிகழ்ச்சியை நன்றியுடன் நினைவு கூர்கிறார் ஓரிடத்தில்: நான் **இஸ்லாத்தைத்** தழுவிய முதல் நாளில் எனது அலுவலகத்திற்குச் சென்றேன். எனது மேலதிகாரி எனது தோற்றத்தைக் கண்டு காரணம் கேட்டார். விளக்கினேன். உடனே தனக்கு வந்த பார்சல் ஒன்றை எடுத்து வாழ்த்துக்கூறி என்னிடம் தந்தார். அதைப் பிரித்துப் பார்த்தேன். அது முஸல்லா! தொழுகை விரிப்பு! அருகிலிருந்த சிறிய அறையை தொழுமிடமாகப் பயன் படுத்திக் கொள்ளவும் எனக்கு அனுமதியும் அளித்தார். எனது மகிழ்ச்சிக்கு அளவே இல்லை! அல்ஹம்து லில்லாஹ் - எல்லாப் புகழும் அல்லாஹ் வுக்கே என்று நன்றிப் பெருக்குடன் வானை நோக்கி உயர்கின்றன ஷாஹீனின் கைகள்!

நாகரிகத்தின் உச்சாணிக் கொம்பில் இருப்பதாகத் தம்பட்டமடிக்கும் அமெரிக்காவில் வாழும் ஷாஹீன், அங்கு இஸ்லாத்திற்கு எதிராகக் கிளப்பிவிடப்படும் ஏவகணைகளை எதிர்த்துத் தாக்கும் இஸ் லாமியப் போர்க் கருவியாகத் திகழ்கின்றார்! நன்றி: சமரசம் (1 -15 ஜூ ன் 2007)

**நபிமொழியின் ஒளியில்**

# நோன்பின் கூலியை வீணாக்கி விடாதீர்!

இறைத்தூதர்கள் ஆன்மீக மருத்துவர்கள் ஆவர். இறைவனிடமிருந்து கிடைக்கப்பெற்ற வஹியின் வெளிச்சத்தில் மனித குலத்திற்கு அவர்கள் நேர்வழி காட்டுகிறார்கள். அந்த வழிகாட்டல்தான் இஸ்லாம் ஆகும். உலக வாழ்வின் விவகாரங்களை மட்டுமல்ல தொழுகை, நோன்பு போன்ற வணக்க வழிபாடு களையும் நபி(ஸல்)அவர்கள் காட்டிய நெறிமுறைப்படி அமைத்துக் கொண்டால்தான் அதன் முழுமையான பயன்களை நாம் அடைந்திட முடியும்.

எனவே நன்மைகள் பூத்துக் குலுங்கும் புனித ரமளான் மாதத்தில் நோன்புக் கடமையை நிறை வேற்றக்கூடிய நாம் அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ள நெறிமுறைப்படி அதை நிறை வேற்றிட வேண்டும். அவர்கள் தடுத்துள்ள தீய சொற்கள், தீய செயல்கள் அனைத்தை விட்டும் நாம் விலகிட வேண்டும். அப்போதுதான் நோன்பின் பயன்களை முழுமையாக நாம் அடைந்திட முடியும்.

நோன்பாளிகள் பேணிட வேண்டிய சில முக்கியமான ஒழுங்கு முறைகளை - குர்ஆன் மற்றும் நபிமொழிகளின் ஒளியில் இங்கு நாம் பார்ப்போம்.

1) முதலாவது தொழுகையை நிரந்தரமாகப் பேணுவது கடமை. பள்ளிவாசலுக்குச் சென்று ஜமாஅத் துடன் தொழுவதை நிரந்தரமாக்கிக் கொள்ள வேண்டும். தக்வா எனும் இறையச்சத்தின் அடிப்படையில் நோன்புக் கடமையை நிறைவேற்றும் நாம் - தொழுகையை வீணடிப்பது இறையச்சத்திற்கு முரணானது, தண்டனைக்குரியது என்பதைக் கவனத்தில் கொள்ளவேண்டும். குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : فَخَلَفَ مِنْ بَعْدِهِمْ خَلْفٌ أَضَاعُوا الصَّلاَةَ وَاتَّبَعُوْا الشَّهَوَاتِ فَسَوْفَ يَلْقَوْنَ غَيًّا اِلاَّ مَنْ تَابَ آمَنَ وَ عَمِـــلَ عَمَـــلاً صَالِحًا فَأُولَئِكَ يَدْخُلُوْنَ الْجَنَّةَ وَلاَ يُظْلَمُوْنَ شَيْئًا ( سورة مريم الآية : ٥٩ – ٦٠)

அவர்களுக்குப் பிறகு சீர்கெட்ட மக்கள் பிற்சந்ததிகளாகத் தோன்றினார்கள். அவர்கள் தொழுகையை வீணாக்கினார்கள். மன இச்சைகளின்படி நடந்தார்கள். அத்தகையவர்கள் தங்களது வழிகேட்டின் தீய விளைவை விரைவில் சந்தித்தே தீருவார்கள். ஆனால் எவர் பாவமன்னிப்புக் கோரி, ஈமான் - நம்பிக்கை கொண்டு நற்செயலும் புரிந்தாரோ அவர்கள் சுவனத்தில் நுழைவார்கள். அவர்களுக்கு சிறிதளவும் அநீதி இழைக்கப்பட மாட்டாது (19 : 59 - 60)

2) பொய் சொல்வது, புறம் பேசுவது, கோள் சொல்வது, திருடுவது ஆகியவற்றைத் தவிர்த்திட வேண்டும். நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: பொய் பேசுவதையும் அதன்படி செயல்படுவதையும் யார் கைவிட வில்லையோ அவர் (வெறுமெனே) உண்ணாமலும் பருகாமலும் இருப்பதில், அல்லாஹ்வுக்கு எந்தத் தேவையும் இல்லை (நூல்: புகாரி) புறம் பேசுவது எவ்வளவு கொடிய பாவம் என்பதைப் பின்வரும் வசனம் சுட்டிக்காட்டுகிறது:

قال الله تعالى: وَلاَ يَغْتَبْ بَعْضُكُمْ بَعْضًا اَ يُحِبُّ أَحَدُكُمْ أَنْ يَأكُلَ لَحْمَ أَخِيْهِ مَيْتًا فَكَرِهْتُمُوْهُ ( سورة الحجرات الآية : ١٢)

உங்களில் எவரும் மற்றவரைப் பற்றி புறம் பேச வேண்டாம். உங்களில் ஒருவர், இறந்துவிட்ட தன் சகோதரரின் இறைச்சியை உண்ண விரும்புவாரா, என்ன? அதனை நீங்களே அறுவருப்பாகக் கருதுகி றீர்கள்! (49 : 12) அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: கோள் சொல்பவன் சுவனம் புக மாட்டான் (புகாரி, முஸ்லிம்)

3) வியாபாரம் கொடுக்கல் - வாங்கல்களில் மோசடியைத் தவிர்த்திட வேண்டும். நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: யார் நமக்கு மோசடி செய்தாரோ அவர் நம்மைச்சேர்ந்தவர் அல்லர் (முஸ்லிம்)

4) இசைக் கருவிகளையும் அவை சார்ந்த தீமைகளையும் தவிர்த்திட வேண்டும்.

قال النبي ﷺ: ليكونن من امتي أقوام يستحلون الحِرَ والحرير والخمر والمعازف

நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: எதிர்காலத்தில் என் சமுதாயத்தில் சில கூட்டம் தோன்றும். அவர்கள், விபச்சாரத்தையும் பட்டாடைகளையும் மதுவையும் இசைக் கருவிகளையும் ஹலால் - ஆகு மாக்கப்பட்டவையாகக் கருதுவார்கள் (நூல்: புகாரி)

ரமளான் நோன்பின் நோக்கம் இறையச்சம், பயபக்தி என்பதை நாம் அறிந்திருக்கும்போது அதற்குரிய வழிமுறைகளைப் பின்பற்றி நடந்தால்தான் நோன்பைப் பயனுள்ளதாக ஆக்கிட முடியும். மறுமைக் கூலியைப் பெற்றிட முடியும். ஓர் எடுத்துக்காட்டு: ஒரு நோயாளி நோயிலிருந்து தப்பிப்பதற்காக மருத்து வரிடம் செல்கிறார். அவர் வழங்கும் மருந்துகளை உண்ணுகிறார். அதே நேரத்தில் மருத்துவரின் அறிவு ரைப்படி நடப்பதில்லை என்றால், அவர் என்னென்ன உணவுகளை, பழக்க வழக்கங்களை கைவிட வேண்டும் என்கிறாரோ அவற்றை கைவிடவில்லை என்றால் அந்த நோயாளி குணமடைய முடியுமா? வெறுமெனே மருந்துகளை உண்பதால் மட்டும் எதிர்பார்த்த பயன் கிடைக்குமா? நிச்சயமாக கிடைக் காது, இல்லையா! இப்படிப்பட்ட நோயாளியின் நிலைதான் - புறம் பேசுவதை விடாத, பொய் பேசுவதை விடாத, பிற தீமைகளை விட்டும் விலகிடாத நோன்பாளியின் நிலையும்! எனவே நோன்பில் கட்டாயம் பேணிட வேண்டிய ஒழுங்கு முறைகளையும் பேணி நடந்து நோன்பின் முழுப் பலன்களை அடைவோமாக!

# லைலத்துல் கத்ர் இரவின் சிறப்பு

ரமளானின் இறுதி பத்து நாட்களில்தான் லைலதுல் கத்ர் எனும் அந்த இரவு உள்ளது. அல்லாஹ் இதனை ஏனைய இரவுகளைக் காட்டிலும் சிறப்பாக்கியுள்ளான். இந்த இரவில் ஏராளமான சிறப்புகளை யும் நன்மைகளையும் வழங்கி இந்தச் சமுதாயத்தின் மீது அல்லாஹ் கருணை பொழிந்துள்ளாள். குர்ஆனில் இதன் சிறப்பைத் வெகுவாகப் பாராட்டி இவ்வாறு கூறுகிறான்:

قال تعالى : اِنَّا اَنْزَلْنَاهُ فِىْ لَيْلَةٍ مُبَارَكَةٍ اِنَّا كُنَّا مُنْذِرِيْنَ فِيْهَا يُفْرَقُ كُلُّ اَمْرٍ حَكِيْمٍ اَمْرًا مِنْ عِنْدِنَا اِنَّا كُنَّا مُرْسِلِيْنَ ، رَحْمَةً مِنْ رَّبِّكَ اِنَّهُ هُوَ السَّمِيْعُ الْعَلِيْمُ ، رَبُّ السَّمَاوَاتِ وَالْاَرْضِ وَمَا بَيْنَهُمَا اِنْ كُنْتُمْ مُوْقِنِيْنَ ، لاَاِلَهَ اِلاَّ هُوَ يُحْيِيْ وَ يُمِيْتُ رَبُّكُمْ وَرَبُّ آبَائِكُمُ الْاَوَّلِيْنَ

இதனை, அருள்பாலிக்கப்பட்ட ஓர் இரவில் நாம் இறக்கி வைத்தோம். ஏனெனில் மக்களை எச்சரிக்கை செய்ய நாடியிருந்தோம். அது எத்தகைய இரவு எனில், அதில்தான் உறுதிமிக்க ஒவ்வொரு விவகாரத்திற்கும் தீர்ப்பு பெறப்படுகிறது! இது நம்மிடத்தில் நின்றும் உள்ள கட்டளையின் அடிப்படையில் ஆனது. திண்ணமாக நாம்தான் (தூதரை) அனுப்பக்கூடியவர்களாய் இருந்தோம். (நபியே!) இது உம் இறைவனின் கருணையாகும். திண்ணமாக அவன் அனைத்தையும் கேட்கக்கூடியவன், அறியக்கூடியவன். அவனே,வானங்களுக்கும் பூமிக்கும் அவ்விரண்டுக்குமிடையே உள்ள அனைத்திற்கும் அதிபதி (என்பதை) உறுதியான நம்பிக்கை உடையவர்களாய் இருந்தால் நீங்கள் (காண்பீர்கள்!) அவனைத் தவிர வணக்க திற்குரிய இறைவன் வேறில்லை. அவனே உயிரையும் மரணத்தையும் கொடுக்கிறான். உங்கள் இரட்ச கனும் அவன்தான். முன்பு வாழ்ந்து சென்ற உங்கள் மூதாதையர்களின் இரட்சகனும் அவன்தான்!(44:3-8)

இந்த இரவை அருள்பாலிக்கப்பட்ட இரவு என்று அல்லாஹ் குறிப்பிடுகிறான். அந்த அளவுக்கு இதன் நன்மையும் நற்பாக்கியமும் சிறப்பும் ஏராளம் உள்ளன. இந்த இரவின் பாக்கியம் என்னவெனில், சிறப்புக்குரிய இறைவேதம் குர்ஆன் இந்த இரவில்தான் இறக்கியருளப்பட்டது என்பதாகும்.

மேலும் இந்த இரவில் உறுதிமிக்க ஒவ்வொரு விவகாரமும் பெறப்படுகிறது என்று அல்லாஹ் குறிப்பிட் டுள்ளான். அதாவது, இந்த ஆண்டு முழுவதும் - அல்லாஹ்வின் கட்டளையினால் நிகழவிருக்கும் ரிஜ்க் எனும் வாழ்வாதாரங்கள் வாழ்க்கைத் தவணைகள், நன்மைகள் - தீமைகள் போன்ற அனைத்தும் **லௌஹு ல் மஹ்ஃபூழ்** எனும் மூல ஏட்டிலிருந்து பெறப்பட்டு எழுத்தர்களிடம் சேர்ப்பிக்கப்படுகின்றன! உறுதிமிக்க ஒவ்வொரு விவகாரம் என்பது அல்லாஹ்வுடைய உறுதிமிக்க கட்டளைகளாகும். எப்படிப் பட்ட உறுதியான கட்டளைகள் எனில், அவற்றில் எவ்வித இடையூறோ குறைபாடோ மூடத்தனமோ வீண் நிலையோ கிடையாது. யாவற்றையும் மிகைத்தவனும் பேரறிவாளனுமாகிய அல்லாஹ்வினால் நிர்ணயிக்கப் பட்டவையாகும் அவை! - மேலும் அல்லாஹ் கூறுகிறான்:

قال تعالى: اِنَّا اَنْزَلْنَاهُ فِى لَيْلَةِ الْقَدْرِ وَمَا اَدْرَاكَ مَا لَيْلَةُ الْقَدْرِ ، لَيْلَةُ الْقَدْرِ خَيْرٌ مِّنْ اَلْفِ شَهْرٍ، تَنَزَّلُ الْمَلاَ ئِكَةُ وَالـــرُّوْحُ فِيْهَا بِاِذْنِ رَبِّهِمْ مِنْ كُلِّ اَمْرٍ ، سَلاَمٌ هِىَ حَتَّى مَطْلَعِ الْفَجْرِ

திண்ணமாக நாம் இதனை (குர்ஆனை லைலத்துல் கத்ர் எனும்) மாட்சிமைமிக்க இரவில் இறக்கி வைத்தோம். மாட்சிமைமிக்க அந்த இரவு என்ன என்று உமக்குத் தெரியுமா? மாட்சிமைமிக்க இரவு ஆயிரம் மாதங்களை விடச் சிறந்ததாகும். அதில் மலக்குகளும் ஜிப்ரீலும் தம் இறைவனின் அனுமதி யுடன் அனைத்துக் கட்டளைகளையும் ஏந்தியவண்ணம் இறங்குகிறார்கள். அந்த இரவு முழுவதும் சாந்திமயமாகத் திகழ்கிறது., வைகரை உதயமாகும் வரை! -(97 : 1 - 5)

கத்ர் என்பதன் பொருள், சிறப்பு, கண்ணியம் அல்லது இறைவன் நிர்ணயித்த விதி என்பதாகும். ஏனெனில் லைலதுல் கத்ர் இரவு சிறப்பும் மாண்பும் உடையது. மேலும் அந்த ஆண்டு முழுவதும் நிகழவிருக்கும் உறுதிமிக்க கட்டளைகளை அல்லாஹ் இந்த லைலத்துல் கத்ர் இரவில் நிர்ணயிக்கி றான்., தீர்ப்பளிக்கிறான்.

லைலத்துல் கத்ர் ஆயிரம் மாதங்களைவிடவும் சிறந்ததாகும் - அதாவது, சிறப்பு, மாட்சிமை, ஏராள மான நன்மை, நற்கூலி ஆகியவற்றைப் பொறுத்து சிறந்த இரவாகும். இதனால்தான் எவர் லைலதுல் கத்ர் இரவில் ஈமானுடனும் மறுமையின் நற்கூலியை எதிர்பார்த்தும் தொழுகிறாரோ அவருடைய முந்தைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுகின்றன.

அபூ ஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: விசுவாசத்துடனும் மறுமை நன்மையை எதிர்பார்த்தும் எவர் லைலத்துல் கத்ர் இரவில் தொழுதாரோ அவருடைய முந்தைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுகின்றன (நூல்: புகாரி, முஸ்லிம்)

ஈமானுடன் தொழுவது என்றால் அல்லாஹ்வின் மீதும் மறுமைக்கூலி மீதும் நம்பிக்கைகொண்டு தொழுவது என்று பொருள். எதிர்பார்ப்புடன் தொழுவது என்றால், நற்கூலியையும் நன்மையையும் எதிர்பார்த்து என்று பொருள்.

இந்த இரவை அறிந்தவர்களுக்கும் அறியாதவர்களுக்கும் இந்தச்சிறப்பு கிடைக்கும். ஏனெனில் இந்தக் கூலி கிடைக்கும் விஷயத்தில் இந்த இரவை அறிந்திருக்க வேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் நிபந்தனை விதிக்கவில்லை!

# الأضحية : أحكامها وآدابها

## உழ்ஹிய்யாவின் நெறிமுறைகள்

குர்பானி நபி (ஸல்) அவர்கள் மிகவும் வலியுறுத்திய நடைமுறையாகும். இதற்கு உழ்ஹிய்யா என்றும் சொல்லப்படும். குர்பானி சட்டங்கள் - நெறிமுறைகள் தொடர்பான ஹதீஸ்களை இங்கு பார்ப்போம்.

கொம்புள்ள, கருப்பு கலந்த இரண்டு வெள்ளை நிற ஆடுகளை நபி (ஸல்) அவர்கள் உழ்ஹிய்யா வாகக் கொடுத்தார்கள். அப்பொழுது பிஸ்மில்லாஹ் (அல்லாஹ்வின் திருப்பெயரால்) என்றும் அல்லாஹு அக்பர் என்றும் கூறினார்கள். (அறிவிப்பு: அனஸ் (ரலி) நூல்: புகாரி)

## குர்பானி கொடுப்பதற்கான நேரம்

ஹஜ்ஜு ப் பெருநாள் தொழுகை முடிந்த பிறகுதான் குர்பானி கொடுக்க வேண்டும். அதற்கு முன்னர் கொடுத்தால் அது உழ்ஹிய்யாவாக ஆகாது. ஒருவர் தொழுகைக்கு முன் குர்பானி கொடுத்தால், தன் குடும்பத்தாரின் தேவைக்காக அறுத்துக்கொண்ட தாகத்தான் அது ஆகும். அது பற்றி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறும்போது - அப்படி முன்னதாக அறுத்தவர் மற்றொரு குர்பானி கொடுக்க வேண்டும் என்று வலியுறுத்தி னார்கள். (நூல்: புகாரி)

## அறுக்கும் முறை

(1) ஆடு, மாடுகளை ஒருபக்கமாகப் படுக்க வைத்து அறுக்க வேண்டும். (முஸ்லிம்)

(2) ஒட்டகங்களை நிற்கவைத்து அறுக்க வேண்டும் (முஸ்லிம்) - வசதிக்கு ஏற்ப செய்து கொள்ளலாம்.

## பயன்படுத்தும் முறை

உழுஹிய்யாவாக அறுக்கப்பட்ட கால்நடைகளின் முடிகளையோ தோல்களையோ மாமிசங் களையோ அறுத்தவருக்குக் கூலியாகக் கொடுக்கக்கூடாது. அலீ (ரலி) அவர்கள் கூறு கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் குர்பானி கொடுப்பதற்கான ஒட்டகங்களை மேற்பார்வை செய்வதற்காக என்னை நியமித்தார்கள். அவற்றின் மாமிசம், தோல் மற்றும் துணிகள் ஆகியவற்றை தர்மம் செய்திட வேண்டும் என்றும் அவற்றில் எதனையும் அறுப்பவருக்குக் கூலியாகக் கொடுக்கலாகாது என்றும் குறிப்பிட்டார்கள். அறுப்பதற்கான கூலியை நாங்கள் தனியாகக்கொடுப்போம் (நூல்: புகாரி, முஸ்லிம்)

## எப்படிப்பட்ட கால்நடைகளைப் பலியிட வேண்டும்?

(1) ஆடு, மாடு மற்றும் ஒட்டகங்கள் மட்டும். (நூல் : புகாரி - ஒரு ஹதீஸின் கருத்து)

(2) ஒரு குடும்பத்திற்கு ஓர் ஆடு போதும். (நூல்: முஸ்லிம்)

(3) மாடு மற்றும் ஒட்டகத்தில் ஏழு பேர் பங்கேற்கலாம். (நூல்: முஸ்லிம்)

(4) கீழ்க்காணும் குறைபாடுகள் இருக்கக்கூடாது. ஒரு கண் இல்லாதது. கடுமையான நோய்க்கு ஆளானது. மிகவும் மோசமாக மெலிந்திருப்பது. நடக்க முடியாத அளவுக்கு நொண்டியானது. இப்படிப்பட்ட கால்நடைகளை குர்பானி கொடுக்கலாகாது(அபூ தாவூத்)

## பொறுப்பானவர் கடைப்பிடிக்க வேண்டிய நெறி

துல்ஹஜ் பிறை ஒன்றில் இருந்து குர்பானி கொடுத்து முடிக்கும் வரையில் தனது உடலில் இருந்து முடிகள், நகங்கள், தோல்கள் இவற்றில் எதனையும் அகற்றக் கூடாது. இப்படிச் செய்யக்கூடாதென நபி (ஸல்) அவர்கள் தடுத்துள்ளதாக அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள். (நூல்: முஸ்லிம்)

# وجعلنا بعضكم لبعض فتنة – لغة تاميل –

## இந்தக் கேள்விக்கு என்ன பதில்?

இறைவன் நீதிமிக்கவன் என்று கூறுகிறீர்கள். ஆனால் நடைமுறை அனுபவம் அப்படி இல்லையே! சில மனிதர்கள் உடற்குறைபாடு உடையவர்களாவும் வேறு சிலர் மந்தப் புத்தியுடனும் படைக்கப்பட்டுள்ள னரே, அது ஏன்? இது அவர்கள் மீது இழைக்கப்படும் அநீதி அல்லவா? இப்படி சில கேள்விகள்!

இந்தக் கேள்விகளை இன்னும் வரிவாகப் பார்ப்போம்.

ஏன் எனக்கு ஆறடி உயரம் வழங்கப்படவில்லை?
ஏன் எனக்கு வெள்ளை நிறம் தரவில்லை?
ஏன் என்னை அழகாகப் படைக்கவில்லை?
ஏன் என்னை அறிவாளியாக ஆக்கவில்லை?
ஏன் என்னைச் செல்வச் செளிப்பான குடும்பத்தில் பிறக்கச் செய்யவில்லை?
ஏன் என்னை முதலாளியாக ஆக்கவில்லை?
ஏன் என்னை ஆட்சியாளனாக ஆக்கவில்லை?
ஏன் என்னை 21 ஆம் நூற்றாண்டில் வாழச் செய்யவில்லை?

இப்படிப் பலர் சில பல கேள்விகளைக் கேட்கலாம்! இந்தக் கேள்விகளை அவரவர் நிலையிலிருந்து பார்க்கிறபோது முற்றிலும் நியாயமான கேள்விகளாகவும் தெரியலாம்!

இதேபோன்று சில கேள்விகளைக் கேட்கும் உரிமையைப் பெண்களுக்கும் கொடுத்தாக வேண்டும். ஆம்! பெண்களும் இப்படிச் சில கேள்விகளைக் கேட்கலாம்:

மாதத்தில் சில குறிப்பிட்ட நாட்களில் கஷ்டத்தை அனுபவிக்கும் வகையில் எங்களை ஏன் படைக்க வேண்டும்? நாங்கள் மட்டும்தான் கர்ப்பத்தைச் சுமக்க வேண்டுமா? பிள்ளைகளைப் பெற்றெடுக்கும் பொறுப்பும் பாலூட்டி வளர்க்கும் பொறுப்பும் எங்களுக்கு மட்டும் ஏன்? அதாவது எங்களை ஆண்களாக ஏன் படைக்கவில்லை என்று பெண்கள் கேட்கலாம்.

இப்படி எந்த வேறுபாடும் இல்லாமல் மனிதர்கள் அனைவரையும் ஒரே மாதிரி படைப்பதுதான் நீதி எனில், அனைவரும் ஒரே பிரதேசத்தில், ஒரே விதமான காலச் சூழ்நிலையில், ஒரே குடும்பத்தில், ஒரே தாய் தந்தையரின் பிள்ளைகளாக, ஒரே மாதிரி அறிவுடையவர்களாக, ஒரே மாதிரியான உடல் அமைப்பு டன், ஒரே தோற்றம் உடையவர்களாக, ஒரே மாதிரியான ஆரோக்கியம் உடையவர்களாக பிறந்து வாழ வேண்டியது வரும்! இது முற்றிலும் சாத்தியமில்லாதது, நடைமுறைக்கு ஒத்துவராது என்பதை எல்லோ ரும் ஒப்புக் கொள்வார்கள்.

ஆக! வேறுபாடு என்பது மனித குலம் நிலைபெறத் தேவையான ஒன்றாகும் என்பது தெளிவாகிறது.

மனித வாழ்வு மரணத்துடன் முடிவடைந்து விடும் என்றிருந்தால் நீதி குறித்த இந்தக் கேள்விகள் மிக முக்கியமானவைதான். ஆம்! பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள வாழ்க்கை எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருந்தே ஆக வேண்டிவரும்! வாழ்க்கையை எல்லோரும் ஒரே மாதிரியாக அனுபவிக்க வாய்ப்புக் கொடுத்தே ஆக வேண்டிவரும்!

எனவேதான் நீதிமிக்க இறைவன் மரணத்தோடு வாழ்க்கையை முடித்து விடவில்லை. இவ்வுல வாழ்வு செயல்படுவதற்கான காலம். விசாரணையும் தீர்ப்பும் விளைப்பலனும் மரணத்திற்குப் பிறகு வரக்கூடிய மறு உலக வாழ்க்கையில் நடைபெறும் என்று ஆக்கிவைத்துள்ளான்!

ஒவ்வொருவருக்கும் வழங்கப்பட்டுள்ள திறமைக்கு ஏற்றவாறுதான் பொறுப்புகளும் கடமைகளும் தரப்பட்டுள்ளன.

செலவந்தர்கள் மீதான பொறுப்பும் கடமையும் ஏழைகள் மீது இல்லை. அறிஞர்கள் மீதான கடமை பாமர மக்கள் மீது இல்லை. அறிவாற்றல் மிக்கவர்கள் மீதான கடமை சாதாரண அறிவுடையவர்களுக்கு இல்லை. உடல் குறைபாடு உள்ளவர்களுக்கு ஆரோக்கிய சாலிகளை விடப் பொறுப்புகள் குறைவு தானே!

ஒவ்வொருவரும் தத்தம் ஆற்றல்களை எவ்வாறு பயன்படுத்தினார்கள், கடமைகளை எவ்வாறு நிறை வேற்றினார்கள் என்று மதிப்பீடு செய்யப்படும். அதன் அடிப்படையில் தீர்ப்பு வழங்கப்படும்.

எனவே மறுமை வாழ்வு இல்லையென்றால் மட்டும்தான் பூமியில் மனிதர்களின் இதுபோன்ற நிலைகள் அநீதியாக இருக்கும். நிலையான மறுமை வாழ்வு திண்ணமாக உள்ளதால் உடற்குறைபாடும் ஆரோக் கிய ரீதியான வேறு பாடுகளும் சிந்திக்கும் ஆற்றலில் வித்தியாசங்களும் இறைநிதிக்கு முரணமானதல்ல!

ஆரோக்கியம் உடையவர்கள், உடற்குறைபாடு உடையவர்களுக்கும் செல்வந்தர்கள், ஏழைகளுக்கும் உதவி செய்து அனுதாபத்துடன் அன்போடு உதவிகள் செய்து நடப்பதைப் பொறுத்து - இருசாராரும் பரஸ்பரம் நடந்து கொள்வதைப் பொறுத்து மறுவுலகத்தில் நற்கூலி - தண்டனை வழங்கப்படும்.

எனவே இறைவனை மறுக்கும் நாத்திக வாதிகளிடம் - அவர்களின் பாஷையில் கேள்வி கேட்போம்: உங்கள் இயற்கை செய்த இந்தக் கடும் அநீதிக்கு என்ன பதில் சொல்லப் போகிறீர்கள்?

## اكتشف سعادتك الحقيقية

## உங்களது உண்மையான நற்பாக்கியத்தைக் கண்டுபிடியுங்கள்

உண்மையான நற்பாக்கியத்தை நீங்கள் விரும்புவீர்களாயின் இந்த வரிகளைப் படிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

## நற்பாக்கியமும் வாழ்க்கையும்

நற்பாக்கியம் என்பது மனிதனின் கைதவறிய பொருளாகும்.,அதை அடைவதற்கே ஒவ்வொரு நேரமும் அவன் முயற்சி செய்துகொண்டிருப்பான். அதையே எல்லா இடங்களிலும் தேடிக்கொண்டிருப்பான்.

மனிதர்கள் அனைவரும் நற்பாக்கியத்தைப் பற்றி சிந்திக்கிறார்கள். பணத்தின் மூலம்தான் நற்பாக்கி யத்தை அடைய முடியும் என்பது சிலரின் கருத்து. ஆனால் உலகின் முதல்பணக்காரரும் மைக்ரோ சாஃப்ட் கம்பெனியின் நிறுவனருமான பில்கேட்ஸ் இந்தக் கருத்தை மறுக்கிறார். அவர் கூறுகிறார்: நற் பாக்கியத்தைப் பெற்றுத் தருவதற்குச் செல்வம் போதுமாகாது. சரியாகச் சொல்வதானால், செல்வச் செழிப்பு மனிதனுக்குக் கேடாகவே முடியும் என்றுதான் சொல்ல வேண்டும். (ஆதாரம்: சிரியாவின் ஃபுராத் நாளிதழ் 7 - 5 - 2006)

அப்படியானால், நற்பாக்கியம் என்பது என்ன?பணத்தினாலோ உயர் பதவியினாலோ அதிகப் பிள்ளைப் பேறுகளினாலோ கிடைக்கக்கூடியதல்ல அது. நற்பாக்கியம் என்பது மானசீகமான ஒன்று. அதைக் கண் ணால் காண முடியாது. அதன் எடை எவ்வளவு என்று நிறுத்துப் பார்க்கவும் முடியாது. களஞ்சியங் களில் வைத்துப் பூட்டவும் முடியாது. பணத்தைக் கொடுத்து விலைக்கு வாங்கவும் முடியாது.

நற்பாக்கியம் என்பது வாழ்க்கை எனும் செயற்களத்தில் மனிதன் சீராக நடைபோடுவதாகும். அதாவது, அகிலம் முழுவதையும் படைத்த அந்த மாபெரும் இறைவனின் விருப்பப்படி அமல் செய்வ தாகும். அவன் வழங்கியுள்ள ஆற்றல்களை -திறமைகளைக்கொண்டு அவனது விருப்பத்திற்கேற்ப செயல் படுவதாகும். மன அமைதியுடன் - நிம்மதியுடன் - எப்பொழுதும் மலர்ந்த முகத்துடன் - மகிழ்ச்சியான வாழ்க்கை வாழ்வதாகும்.

இதேபோல் துன்பங்கள் நேரிட்டால் பொறுமையுடன் அவற்றை எதிர்கொள்ள வேண்டும். அதன்பேரில் மறுமைக் கூலியை எதிர்பார்க்கும் மனதிருப்தி இருக்க வேண்டும்.

மேலும் மரணமே வந்து விட்டால்கூட எப்படிப்பட்ட மனநிலை வேண்டுமெனில், மரணத்தின் மூலம் இறை வனைச் சந்திக்க நெருங்கிச் செல்கிறோம்., நீடித்த நிலையான உலகத்திற்குப் பயணம் புறப்படு கிறோம்., உலக வாழ்க்கையில் செய்து அனுப்பிய ஒவ்வொரு நன்மை மற்றும் நற்செயலின் பேரிலான உண்மையான இருப்பை (Balance) அங்குதான் பெறப்போகிறோம் என்று கருத வேண்டும்.

## இந்தப் பேரண்டம் யாருக்குச் சொந்தம்?

இந்தப் பூமிகள் அந்த வானங்கள் உள்ளிட்ட பேரண்டம் முழுவதுமே எல்லாம் வல்ல இறைவனாகிய அல்லாஹ் ஒருவனுக்கே சொந்தம். வானம் பூமியிலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும் அவற்றின் மத்தியில் உள்ள எல்லாப் படைப்புகளுக்கும் அவன் ஒருவனே எஜமானன். அவன்தான் இவை எல்லாவற்றையும் படைத்தவன். எல்லாவற்றையும் இயக்குபவன். இவ்வகிலங்கள் முழுவதையும் பரிபாலித்துக் காத்து வரும் மகத்துவமிக்க இறைவன். அவன் தனித்தவன். அவனுக்கு இணைதுணை இல்லை. அவன் நித்திய ஜீவன். மாபெரும் நிர்வாகி! உணவும் வாழ்க்கைச் சாதனங்களும் வழங்குபவன். மனிதர்கள் அனைவரையும் கண்காணித்துக் கொண்டிருப்பவன். அவர்களின் அசைவு - அமைதி எனும் எல்லா நிலைகளையும் அவன் அறிகின்றான்.

எனவே மனிதர்கள் அந்த இறைவன் மீது நம்பிக்கை கொள்வது கடமை ஆகும். அவன் ஒருவன் என்று உறுதிகொண்டு அவனை மட்டுமே அவர்கள் வணங்கிட வேண்டும். இதன் மூலம் உண்மையான நற்பாக்கி யத்தை அவர்கள் அடைய முடியும்.

## உலகத்தின் இறுதி முடிவு

இந்த உலகத்தின் ஆயுள், ஒரு குறிப்பிட்ட தவணையுடன் வரையறுக்கப்பட்டதாக உள்ளது. அது எப்போது முடியும் என்பதை அல்லாஹ் மட்டுமே அறிவான். இப்பேரண்டத்தின் படைப்பாளனாகிய இறை வனைத் தவிர உள்ள பிற ஒவ்வொன்றும் அழிந்துபோகும். எல்லா மனிதர்களும் அழிந்து போவார்கள். பிறகு மரணித்த மனிதர்கள் அனைவரையும் இறைவன் மீண்டும் உயிர் கொடுத்து எழுப்புவான்.

அவ்வாறு எழுப்பப்படும் நாளுக்கு மறுமை நாள் என்று பெயர். கேள்வி விசாரணைக்குரிய நாளும் அதுதான்! இவ்வுலகத்தில் மனிதர்கள் செய்த செயல்களைக் குறித்து அல்லாஹ் விசாரணை செய்வான். எவருக் கும் அநீதி இழைக்க மாட்டான். **அந்தக் கேள்வி விசாரணையில் நீங்கள் வெற்றி பெறுவதுதான் உண்மை யான நற்பாக்கியம் ஆகும்.** இவ்வுலகிற்கு அனுப்பப்பட்ட இறைத்தூதர்களின் அழைப்பிற்கு நீங்கள் என்ன பதில் அளித்தீர்கள் என்பதுதான் அந்த விசாரணையின் அளவுகோலாக இருக்கும்.

## நமது நற்பாக்கியத்திற்காகத்தான்!

இவ்வுலகில் இன்னொரு படைப்பையும் அல்லாஹ் படைத்திருக்கின்றான். அவர்கள் மனிதர்களல்லாத வேறொரு படைப்பினமாகும். அவர்களைக் கண்ணால் காண முடியாது. அவர்கள்தான் கண்ணியத்திற் குரிய மலக்குமார்கள். இப்படி ஒரு படைப்பினம் உள்ளது என்று நம்பிக்கை கொள்வது கடமையாகும்.

மலக்குகளை ஒளியினால் அல்லாஹ் படைத்தான். அவர்களுக்கு ஏற்றதான சில அமல்களைச் செய்யு மாறு அவர்களைப் பணித்துள்ளான். எடுத்துக்காட்டாக மனிதர்களின் செயல்களைப் பதிவு செய்தல், மழை பொழிவித்தல், உயிர்களைக் கைப்பற்றுதல், **உண்மையான நற்பாக்கியத்தைத்** தெளிவுபடுத்தும் பொருட்டு வஹி எனும் இறையருட் செய்தியை நபிமார்களிடத்தில் சேர்ப்பித்தல் ஆகியவை போன்று! இதன் கருத்து, இத்தகைய சில செயல்களுக்கு முன்னோட்டமாக அல்லாஹ் ஆக்கி வைத்திருக்கும் காரண காரியங்கள் எதுவும் இருக்க வேண்டியதில்லை என்பதல்ல!

## பரிசுத்தமான ஆதாரம்

நபிமார்களின் மீது வேத நூல்களை அல்லாஹ் இறக்கிவைத்துள்ளான். எடுத்துக்காட்டாக தௌராத், இன்ஜீல், ஜபூர் மற்றும் குர்ஆன் போன்று! இந்த வேத நூல்கள் அனைத்தும் பரிசுத்தமானவை ஆகும்.

இவை அனைத்தும் தெளிவான -பெரிய அளவிலான கடமை ஒன்றை உறுதிப்படுத்துகின்றன. அது தான் அல்லாஹ் ஒருவனையே வணங்கி வழிபட வேண்டும்., அவனுடன் பிற எதனையும் இணை சேர்க்கக்கூடாது என்கிற கடமை.

மேலும் இந்த வேத நூல்கள் ஷரீஅத் சட்டங்களை வழங்குகின்றன. அவை மக்களுக்கு நன்மையின் பக்கம் வழிகாட்டக்கூடிய, அவர்களது வாழ்க்கையையும் வாழ்வாதார வழிகளையும் ஒழுங்குபடுத்தக்கூடிய சட்டங்கள் ஆகும்.

ஆனாலும் இந்த வேதங்கள் அனைத்தும் கால ஓட்டத்திற்கு ஈடுகொடுக்க முடியாமல் பல மாற்றங்களுக்கு உள்ளாகி விட்டன. ஆனால் இறுதித் தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் மீது இறக்கியருளப்பட்ட இறுதி வேதம் திருக்குர்ஆன் மட்டும்தான் பாதுகாப்பாக உள்ளது. முந்தைய வேதங்களின் பயனுள்ள அறிவுரைகளை குர்ஆனில் அல்லாஹ் அமைத்து வைத்துள்ளான். மறுமை நாள் வரையில் மனித குலத்திற்குப் பொருத்தமான நெறிகளைத் தரும் அம்சங்களையும் அதில் இணைத்துள்ளான்.

மேலும் அதனை முஹம்மது நபி (ஸல்)அவர்களுக்குரிய ஓர் அற்புதமாகவும் ஆக்கியுள்ளான். அழிந்து போகுதல், மாற்றங்களுக்கு உள்ளாகுதல் ஆகியவற்றை விட்டும் அதனைப் பாதுகாப்பதற்கு அல்லாஹ்வே பொறுப்பேற்றுள்ளான். முந்தைய வேதங்களுக்கு முடிவு கட்டக்கூடியதாகவும் அதனை ஆக்கினான். மேலும் இன்றைய உலகின் பெரும்பெரும் அறிவியல் வல்லுனர்களேகூட சாட்சியம் வழங்கியுள்ள பல்வேறு வகையான - ஆச்சரியத்திற்குரிய புதுப்புது அறிவியல் கருத்துகளையும் அதில் அமைத்து வைத்துள்ளான்.

ஆகையால் இறுதி வேதம் திருக்குர்ஆன் மீது விசுவாசம் கொண்டு அதனைப் பின்பற்றி வாழ்வதை மனிதர்கள் அனைவர் மீதும் அல்லாஹ் கடமையாக்கி இருக்கின்றான் ....

ஏனெனில் உண்மையில் நாம் எந்த ஒரு கருவியை இயக்குவதானாலும் அதனைத் உற்பத்தி செய்த கம்பெனியின் கேட்லாக் (வழிகாட்டி) மூலம்தான் இயக்க முடியும் ... அப்படியிருக்க பகுத்தறிவு, ஆன்மா, உடல் ஆகியவற்றைப் பெற்றுள்ள, கடந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் என முக்காலத் துடனும் வாழ்ந்து கொண்டிருக்கின்ற மனிதனை இயக்குவதெனில் எப்படி? அவனை வெற்றியின் பக்கமும் நற்பேற்றின் பக்கமும் ஓட்டிச்செல்லக்கூடிய முறையில்,படைக்கப்பட்டதன் இலட்சியத்திற்கேற்ப வாழும் வகையில் அவனை இயக்கக் கூடிய கேட்லாக் ஒன்று இருந்தால்தான் முடியும்!

ஆம்! மனிதனை நற்பாக்கியத்தின் பால் கொண்டு சேர்க்கும் வழிகாட்டியாக இருப்பதற்கு திருக்குர்ஆன் பொறுப்பேற்கிறது. குர்ஆனை இறக்கியருளியவன் யார்? அந்த மனிதனைப் படைத்த இறைவன்தானே இறக்கி யருளினான், அவனது உள்ளக்கிடக்கைகளையும் சிந்தனைப் பாங்கையும் நடத்தையையும் ஆன்மா, அறிவு, உடல் ரீதியான அவனுடைய தேவைகளை பிரமிக்கவைக்கும் சமநிலையுடன் நிறைவேற்றும் முறையையும் அறிந்துள்ள இறைவன்தான் குர்ஆனை இறக்கியுள்ளான். அத்தகைய பாக்கியமிக்க திருக்குர்ஆனை எவர் புரிதலுடனும் ஆழ்ந்த சிந்தனையுடனும் ஓதுகிறாரோ அவர் **ஒருவிதமான நற்பாக் கியம்** தன்னை ஆட்கொள் வதை உணருவார். ஆம்! **நிகரில்லாததொரு நற்பாக்கியம்** தன்னை ஆட்கொள் வதை நிச்சயம் உணர்ந்து கொள்வார். தான் படைக்கப்பட்டதன் இலட்சியம் என்ன என்பதையும் புரிந்து கொள்வார்.

## மனிதகுல வழிகாட்டிகள்

உலகின் முதல் மனிதர் ஆதத்தை அல்லாஹ், மண்ணிலிருந்து படைத்தான். ஓரிறையை வணங்கக் கூடிய முஸ்லிமாக அவரை ஆக்கினான். பிள்ளைகளையும் சந்ததிகளையும் அவருக்கு வழங்கினான். அதன் நோக்கம் அவர்களைச் சோதனைக்கு உள்ளாக்க வேண்டும் என்பதுதான்!

காலங்கள் பல கடந்து சென்ற பிறகு ஆதம் நபியின் சந்ததிகள் வழிகெட்டுப் போனார்கள். அவ்வாறு அவர்களை வழிகெடுத்தது ஷைத்தான்கள்தான்! அதனால் அவர்கள் சிலைகளை வணங்கத் தொடங்கினார் கள். மானக்கேடான தீய செயல்களையும் செய்தார்கள்.

அப்போதுதான் மனிதர்களிலிருந்தே தூதர்களை - நூஹ், இப்ராஹீம், மூஸா, ஈஸா போன்ற நபிமார்களை அல்லாஹ் அனுப்பி வைத்தான். நற்செய்தியாளர்களாகவும் எச்சரிக்கை செய்பவர்களாகவும் அவர்களை ஆக்கி னான். அந்த நபிமார்கள் அல்லாஹ்வின் தூதுச் செய்தியை மக்களிடம் சேர்ப்பித் தார்கள். அதன் நோக்கம் மனிதர்கள் இவ்வுலகத்திலும் மறுவுலகத்திலும் நற்பாக்கியம் பெற வேண்டும் என்பதுதான்!

ஒரு மனிதன் முஸ்லிமாக வேண்டுமெனில், எல்லா நபிமார்களின் மீதும் நம்பிக்கை கொண்டால் தான், எல்லா நபிமார்களையும் நேசித்தால்தான் முஸ்லிமாக முடியும். இல்லையெனில் அவன் முஸ்லிமாக முடியாது. அந்த நபிமார்களில் இறுதியானவர்தான், உலக வரலாற்றில் மாபெரும் மனிதராக வாழ்ந்த முஹம்மது (ஸல்) அவர்கள். இந்தப் புகழுக்கு மேலை நாடுகளில் உள்ள நேர்மையான சிந்தனையாளர்கள் பலர் சாட்சியம் அளித்துள்ளார்கள்.

எடுத்துக்காட்டாக மைக்கேல் ஹெச் ஹார்ட் எனும் வரலாற்றாய்வாளர். அவர் சொல்கிறார்: நிச்சய மாக முஹம்மது, உலக வரலாற்றில் சமயத்துறையிலும் உலகியல் துறையிலும் உன்னதமான, தெளி வான வெற்றி கண்ட மாமனிதராகத் திகழ்கிறார் ... இத்தகைய ஒருங்கிணைந்த - தனித்துவம் வாய்ந்த வெற்றிதான் - ஈடிணையில்லாத வெற்றிதான் பெரும் செல்வாக்குடைய மாமனிதராக மதிக்கப்படும் நிலைக்கு முஹம்மதை உயர்த்தியுள்ளது என்று நான் கருதுகிறேன் ....

## மனக்கலக்கம் நற்பாக்கியத்தைப் பறித்து விடும்

மனக்கலக்கம் அடைவதால் எந்தப்பயனும் இல்லை. உண்மையாதெனில் மனக்கலக்கம், எதிர்மறை யாக உங்கள் வாழ்க்கையில் கவலையைத் தோற்றுவிக்கும். உடல் நலத்திற்குக் கேடு செய்யும். உள்ளத்தில் நிரந்தரமான துக்கத்தை ஏற்படுத்தும்.

இவ்வுலகில் நிகழும் நிகழ்ச்சிகள் அனைத்தும் அல்லாஹ் நிர்ணயித்த விதிப்படியே நிழக்கின்றன. நிகழ்வதற்கு முன்பே அவை குறித்து அல்லாஹ் விதியில் எழுதி விட்டான். எனவே அந்த விதியை ஏற்றுக் கொள்ளாமல் எதிர்மறையாக மனிதன் கலக்கம் அடையக்கூடாது. அதனால் அவனுக்குக் கிடைப்பது நிராசையும் பதற்றமும்தான்!

அது மட்டுமல்ல, விளைவுகளை உறுதிசெய்யக்கூடிய காரண காரியங்களை மேற்கொள்ளும்படியும் மனிதன் பணிக்கப்பட்டுள்ளான். அத்தகைய செயல்களுக்கு அவனே நேரடிப்பொறுப்பாளன்! இம்மையிலும் மறுமை யிலும் அவற்றினால் எற்படும் விளைவுகளுக்குப் பதில் சொல்லக்கடமைப்பட்டவன் அவன்தான். எனவே செயல்படாமல் இருந்துகொண்டு விதியைக் காரணமாகக்காட்டுவது எந்த வகையிலும் ஏற்புடைய தல்ல. ஆனாலும் விதியைப் பொருந்திக்கொள்ள வேண்டும். தனது அறிவு ஞானத்தாலும் விவேகத் தாலும் விதியை நிர்ணயித்த அந்த இறைவனிடம் இருந்து, விதியைப் பொருந்திக் கொண்டதற்கான கூலியை எதிர்பார்த்திட வேண்டும்.

இந்தக் கொள்கைதான், மனிதனை நிதானத்துடனும் மன நிம்மதியுடனும் நற்பாக்கியசாலியாகவும் வாழச் செய்கிறது. செயலாற்றல் உடையவனாக அவனை ஆக்குகிறது.

## மனிதன் படைக்கப்பட்டதன் இலட்சியம்

அல்லாஹ் மனிதர்களை படைத்து அவர்களுக்குப் பகுத்தறிவை வழங்கினான். அதன் மூலம் எது சத்தி யம், எது அசத்தியம் என்று அவர்கள் தெளிவாகப் புரிந்து கொள்கிறார்கள். மேலும் இவ்வுலகில் மனிதர்கள் வீணுக்காகப் படைக்கப்படவில்லை., ஒரு மகத்தான் குறிக்கோளுக்காகவே அவர்களை இறைவன் படைத்தி ருக்கிறான். அதுதான் இபாதத் - இறைவழிபாடு எனும் குறிக்கோள்.

இபாதத் என்பது பொருட்செறிவான ஓர் அரபிச்சொல்லாகும். அதன் சுருக்கமான கருத்து இதுதான்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவன்தான் என்று ஏற்று மொழிந்து, அவனுடைய கட்டளைகளை நிறைவேற்றுவதும், அவன் விலக்கியவற்றை விட்டும் விலகுவதும்தான் இபாதத் ஆகும்.

இந்த இபாதத் - இறைவழிபாட்டை மேற்கொள்வதில் மனிதர்களுக்கு சுயவிருப்பம் அளிக்கப்பட்டுள் ளது. எவர்கள் இறைவழிபாட்டை உறுதியாகக் கடைப்பிடித்து வாழ்ந்தார்களோ அவர்களுக்கு அல்லாஹ் சுவன பதியை வழங்குவான். **அவர்கள்தான் உண்மையான நற்பாக்கியத்தை அடைந்தவர்கள் ஆவர்.** எவர்கள் இறைவழிபாட்டைப் புறக்கணித்தார்களோ அவர்கள் நீடித்த நிலையான துர்ப்பாக்கி யத்திற்கு ஆளாவார்கள்.

இந்த இடத்தில் இன்னொன்றையும் சுட்டிக்காட்ட வேண்டும். இபாதத் - இறைவழிபாடு என்பது வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் மனிதன் தன்னால் முடிந்த வரையில் ஆக்கப்பூர்வமான பங்களிப்பு நல்குவதை உள்ளடக்கக்கூடியதாகும். ஆனால் அந்தப் பங்களிப்பின் நோக்கம் எதுவாக இருக்க வேண்டுமெனில், இறை வழிகாட்டலின்படி அமைந்த உன்னதமான மனிதப் பண்பாட்டையும் சமூக அமைப்பையும் நிலைநாட்டுவதாக இருக்க வேண்டும். ஆம்! எந்தச் சமூக அமைப்பில் மனிதன் நீதியை யும் கண்ணியத்தையும் **பாக்கியமிக்க வாழ்வையும்** அடைவானோ அத்தகைய சமூக அமைப்பை நிலை நாட்டுவதாக இருக்க வேண்டும்.

## இறைக்கண்காணிப்பு

அல்லாஹ்வின் கண்காணிப்பு, மனிதர்களை விட்டும் ஒரு வினாடிகூட நீங்கிவிடாது. இந்த உணர்வு தான் மனித சமுதாயங்களிடத்தில் ஆரோக்கியமான நடத்தையை உறுதிப்படுத்துவதில் பெரும் பங்கு வகிக்கிறது. மேலும் எல்லாச் செயல்களையும் செம்மையாக நிறைவேற்ற வேண்டும் என்கிற உறுதியை மனிதனிடம் தோற்றுவிக்கிறது. இந்த உணர்வைப் பெற்ற மனிதன், நன்மைகளைச் செய்வதில் ஆர்வம் கொண்டவனாக - தீமைகளை விட்டும் விலகியவனாக இருப்பதைக் காண்கிறீர்கள். எந்த அளவுக்கு எனில், மக்களின் கண் களில் படாமல் தனிமையில் இருந்தாலும்கூட அவன் தீமை செய்வதில்லை.

அதே நேரத்தில் இந்த உணர்வு, மனிதனுக்கு ஒருவகையான அமைதியையும் நிம்மதியையும் வெட்க உணர்வையும் நற்பேற்றையும் மனவிருப்பதையும் கொடுப்பதையும் காணலாம்.

## மனிதர்களுடன் பரிவுடன் நடந்து கொள்வது

மக்களுக்கு நீதி வழங்கும்படி அல்லாஹ் கட்டளையிடுகிறான். மேலும் ஏழைகளுக்கு நல்லுபகாரம் செய்வது, சொந்த பந்தங்களுடன் இணைந்து வாழ்வது, பத்தினித்தனம், உண்மை பேசுவது ஆகியவற் றைக் கொண்டும் ஏவுகிறான். மேலும் அநீதி, விபச்சாரம், திருட்டு, வட்டி, மக்களின் மீது வரம்பு மீறல், மனித உயிரை அநியாயமாகக் கொலைசெய்தல், பொய் பேசுதல், ஒருவருக்கொருவர் பெருமையடித்தல் ஆகிய வற்றை அல்லாஹ் தடைசெய்துள்ளான். சுருங்கக்கூறின், இஸ்லாமிய சன்மார்க்கம் மேலான தூய்மையான குண வொழுக்கங்களையும் நன்நெறிகளையும் கடைப்பிடிக்குமாறு ஏவுகிறது. தீய பழக்கங்களையும் கெட்ட குணங்களையும் தடுக்கிறது.

இஸ்லாம் போதிக்கின்ற இத்தகைய பண்பாட்டை மனித குலம் கடைப்பிடித்தால், கட்டுக்கோப்பான பரஸ்பரம் அன்பும் கருணையும் இரக்கமும் கொண்டு வாழும் உன்னதமானதொரு சமுதாயம் அமைந்து அதன் மூலமாக இவ்வுலகில் **உண்மையான நற்பேறுடைய** கூட்டு வாழ்க்கையை அவர்கள் அடைவார்கள். எந்த மனிதனின் உள்ளத்திலும் தோன்றியிருக்காத மேலான இன்பங்கள் நிறைந்த சுவன வாழ்க்கையை

அனுபவிக் கும் **நற்பாக்கியத்தை** மறுமையில் பெறுவார்கள். இது, இறைவிருப்பத்தின் அடிப்படையிலான மறுவுலக் கூட்டு வாழ்க்கை நியதிக்கேற்ப கிடைக்கப்பெறுவதாகும்.

இங்கு இன்னொன்றையும் சுட்டிக்காட்டுவது அவசியம். தாங்களும் முஸ்லிம்கள்தான் என்று சொல்லிக் கொள்ளும் மனிதர்கள் சிலர் தவறுகள் பல செய்வதைக் காணலாம். அந்தத் தவறுகளுக்கு அவர்கள் தான் பொறுப்பே தவிர இஸ்லாம் பொறுப்பல்ல. அத்துடன் அந்தத் தவறுகள் தொடர்பாக அவர்களுக்கு கடும் எச்சரிக்கை விடுக்கப்படுகிறது. அப்படிப்பட்டவர்கள் நிச்சயமாக இஸ்லாத்தின் ஷரீஅத் சட்டங்க ளுக்கு ஏற்ப தண்டனைக்கு உரியவர்களே ஆவர்.

## யாரையும் இழிவாகக்க் கருதாதீர்!

அல்லாஹ்விடத்தில் அதிகக் கண்ணியத்திற்கும் உயர் அந்தஸ்துக்கும் உரியவர்கள் இறையச்சத்து டன் வாழ்பவர்கள்தான். இனம், நிறம் ரீதியிலான பாகுபாடுகளை இஸ்லாம் ஆதரிப்பதில்லை. கருப்பர் கள் மற்றும் வெள்ளையர்களுக்கு மத்தியில், ஏழைகள் மற்றும் பணக்காரர்களுக்கு மத்தியில், அரபி பேசுபவர்கள் மற்றும் அந்நியமொழி பேசுபவர்களுக்கு மத்தியில் எந்த வேறுபாட்டையும் இஸ்லாம் கற்பிப்ப தில்லை. மாறாக **நிரந்தர நற்பாக்கியத்தை** அடைவது பற்றி ஒருவருக்கொருவர் பெருமை பாராட்டுவதற் குரிய களமாக இறை மார்க்கம் ஆக்கியிருப்பது இவ்வுலகில் செய்யப்படும் நற்செயல்களைத்தான்!

## குற்றம் - இஸ்லாத்தின் பார்வையில்!

மனிதன் ஃபித்ரா எனும் தூய இயல்பில் படைக்கப்பட்டுள்ளான். முற்காலத்துப் பாவம் என்று எந்தப் பாவ மும் அவனுடன் ஒட்டிக்கொண்டிருக்கவில்லை. ஆனால் மனிதன் ஏதேனும் பாவங்களைச் செய்து விடலாம். அத்தகைய சூழ்நிலையில் ... அவற்றிலிருந்து விடுபடும் வழிவகையை -பரிகாரத்தை அவனுக்கு அல்லாஹ் அமைத்து வைத்துள்ளான். அதுதான் (செய்த பாவத்தை எண்ணி) மனம் வருந்துவது, பாவமன்னிப்பு தேடுவது, எதிர்காலத்தில் மீண்டும் அதைச் செய்வதிலலை என உறுதி கொள்வது, (பிறரிடம் இருந்து பறித்த) உரிமைகளை உரியவர்களிடம் திருப்ப ஒப்படைப்பது ஆகியவை! எவர் இத்த கைய பரிகாரத்தை மேற்கொள்கிறாரோ அவருடைய பாவங்களை அல்லாஹ் போக்கிவிடுகின்றான். அத்துடன் இம்மை மறுமை **நற்பாக்கியத்தையும்** அவருக்கு வழங்குகிறான்.

பாவம்செய்த மனிதன், அல்லாஹ் அல்லாதவர்களிடம் சென்று அடைக்கலமாவது, தமது பாவங் களை மன்னிக்குமாறு அவர்களிடத்தில் கோரிக்கை வைப்பது, அதற்காக நேர்ச்சைகள் - காணிக் கைகளை அவர்களுக்குச் சமர்ப்பிக்கும் சடங்குகளைச் செய்வது ஆகியவை எந்த வகையிலும் சரியல்ல. அவர்கள் எவ்வளவு உயர் அந்தஸ்து உடையவர்களாக இருந்தாலும் சரியே! ஏனெனில் இணைதுணை இல்லாத அந்த ஏக இறைவன் அல்லாஹ் ஒருவன்தான் பாவங்களை மன்னிக்க வேண்டுமே தவிர வேறு யாருமல்ல.

இத்தகைய கொள்கையானது, மனிதனுக்கு மன அமைதியை, நியாய உணர்வை, வினையமாகச் செயல் படும்நிலையை, இரக்க குணத்தை மற்றும் படைத்த இறைவனின் கருணையின் பேரில் நிராசை அடையா மையை வழங்குகிறது என்பதில் யாதொரு ஐயமும் இல்லை.

## தூய்மையுடன் இருங்கள்!

சுத்தம் என்பது மனிதர்களுக்குப் பிரியமான உயர் பண்பாட்டு இலட்சியமாகும். இஸ்லாம், உடல் உடை இடம் என்கிற மனித வாழ்க்கையுடன் தொடர்புடைய எல்லா இடங்களிலும் தூய்மையை - சுத்தத்தைப் பரா மரிக்குமாறு ஆர்வமூட்டுகிறது ...இன்னும் சொல்லப்போனால் கடமையான ஐங்காலத் தொழுகைகளில் அசுத் தத்தை அகற்றுவதையும் முகம் கை கால்களை கழுகித் தூய்மையை மேற்கொள்வதையும் மனிதனின் மீது கடமையாக்கியுள்ளது.

## மறு பாதி

பெண்களைக் கண்ணியப்படுத்துவது, மரியாதை செய்வது, அவர்களின் உரிமைகளை மதிப்பது, அவர் களின் உணர்வுகளை அறிந்து நடப்பது ஆகியவை, ஆண்களின் மீது அல்லாஹ் கடமையாக்கியுள்ள மேலான குணவொழுக்கங்களில் சேர்ந்தவை ஆகும். அந்த ஆண் தந்தையானாலும் கணவனானாலும் சரியே!

மனைவிக்குரிய எல்லா உரிமைகளையும் வழங்கிட வேண்டுமென கணவனின் மீது அல்லாஹ் கடமை யாக்கி இருக்கிறான். நல்லமுறையில் இணைந்து வாழ்வது, உணவு உடை இருப்பிடம் போன்ற தேவை கள் மற்றும் வாரிசு உரிமை போன்ற எல்லா உரிமைகளையும் வழங்கிட வேண்டும்! மேலும் கணவன் மனைவி இருவருக்கும் மத்தியில் அன்பையும் பாசத்தையும் தோற்றுவிக்கக்கூடிய சட்டப்பூர்வமான எல்லா வழிமுறை களையும் சாதனங்களையும் கையாள வேண்டுமெனவும் இஸ்லாம் ஆர்வமூட்டுகிறது.

## புதுமையை உருவாக்குவீர்

மக்களுக்கு நற்பாக்கியத்தை அளிக்கக்கூடிய, அவர்களின் வாழ்வையும் பொருளீட்டும் வழியையும் இலகு வாக்கக்கூடிய தற்கால நவீன சாதனங்கள் எதையும் இஸ்லாமிய மார்க்கம் தடைசெய்வதில்லை. மாறாக புதுப்புதுக் கண்டுபிடிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் ஊக்கமளிக்கும் மார்க்கம்தான் இஸ்லாம்! ஆனால் ஒரு நிபந் தனை: யாருக்கும் இடையூறு ஏற்பாடாதிருக்க வேண்டும். மேலும் இவ்வுலகிலும் மறுமையிலும் எல்லா மனிதர் களின் **நற்பாக்கியத்திற்கும்** நலன்களுக்கும் பாதுகாப்பு நல்கக்கூடிய இறைநெறியை அனுசரித்து வாழ்வதற்கு எந்தக் கேடும் நேராதிருக்க வேண்டும்.

## நிறைவு, தெளிவு, எளிமை

இஸ்லாம் வகுத்துத்தரும் சட்ட நியதிகளும் வரம்புகளும் தெளிவானவை, எளிமையானவை! இஸ்லாம் கூறும் வணக்க வழிபாட்டு முறைகள் ஒவ்வொன்றுக்கும் நேரடியான சட்டரீதியான ஆதாரங்கள்

உள்ளன. அவை அனைத்தும் முறையாகத் தொகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு முஸ்லிமும் எளிதாகக் கையாளும் வகை யிலும் அவை அமைந்துள்ளன. அவற்றில் குழப்பமோ மயக்கமோ எதுவும் இல்லை. அத்துடன் அவை மனிதர் களின் தனிப்பட்ட ஆராய்ச்சிகளுக்குக் கீழடங்கக்கூடியவை அல்ல! மாறாக இஸ்லாத்தின் மூலாதாரங்கள் அனைத்தும் - மனிதர்களுக்கு **நற்பாக்கியம்** அளிக்கக்கூடிய நடை முறைகள் எவை என்பது பற்றி தெளிவாக அறிந்த எல்லாம் வல்ல இறைவனிடம் இருந்து அருளப்பட் டவை யாகும்! எனவே மனிதர்கள் அனைவரும் - எவ்வளவு உயர் அந்தஸ்துகளைப் பெற்றவர்களாக இருந்தாலும் - இஸ்லாத்தின் மூலாதாரங்களுக்குக் கட்டுப்படுவது கடமையாகும்.

## குற்றச்செயல்களுக்கு எதிராகப் போராட வாருங்கள்!

இஸ்லாம், குற்றச்செயல்களுக்கு எதிராப் போராடுகிறது. அவற்றின் பேரில் தண்டனை வழங்குகிறது. இந்தப் பூமியில் அராஜகச் செயல்களை அடியோடு பிடுங்கி எறிந்திட வேண்டுமென ஆணையிடுகிறது. அப் பொழுதுதான் மக்களின் **வாழ்க்கையில் நற்பாக்கியம் மலர்ந்திடும்.** மேலும் அவர்களின் உயிர், உடமை, மானம் மரியாதை மற்றும் இறைமார்க்கத்தின் அடையாளச் சின்னங்கள் ஆகியவற்றின் பேரில் நிம்மதியை அவர்கள் உணருவார்கள்.

இத்தகைய சட்டங்கள்தான், மனித சமுதாயத்திற்குத் தேவையான அமைதி, **நற்பாக்கியம்** மற்றும் நிம்மதி ஆகியவற்றை வழங்குகின்றன. எவ்விதப் பாகுபாடுமின்றி எல்லா மனிதர்களின் மீதும் அமல் படுத்தப்படுகிற மார்க்க நெறிமுறைகளுக்கு ஏற்ப அமைவதாகும் இது.

## உழைப்பின் களைப்பைத் தணிப்பீர்

மனிதனை இறைவனுடன் தொடர்புபடுத்துவதற்காகவும் அன்றாட உழைப்பினால் ஏற்படும் களைப்பைக் போக்குவதற்காகவும் தினமும் ஐவேளைத் தொழுகைகளை பலதரப்பட்ட நேரங்களில் நிறைவேற்றுவதை அல்லாஹ் கடமையாக்கியிருக்கிறான். அந்தத் தொழுகைகளில் மனிதன், இப்பேரண்டம் முழுவதையும் படைத் துக் காத்துவரும் மகத்துவமிக்க இறைவனிடம் தனது பிரார்த்தனைகளை மொழிகின்றான்., தனது தேவைகளையும் எதிர்பார்ப்புகளையும் சமர்ப்பிக்கின்றான். வேறு எந்த மனிதன் முன்னிலையிலன்றி அந்த இறைவன் திருமுன் மட்டுமே தனது முதுகை வளைத்து குனிந்து நிற்கிறான். அடக்கத்துடனும் பணிவுடனும் தன்னைப் படைத்த இறைவன் முன்னால் தனது நெற்றியைத் தரையில் வைத்து வணங்குகிறான். உள்ளமோ வானத் தைப் படைத்து உயர்த்திய அந்த இறைவனின் நினைவில் வான் வெளியில் வட்டமடிக்கிறது! இந்தத் தொழுகைகள் - **உண்மையான நற்பாக்கியத்தின்** அடித்தளமான ஈமான் எனும் இறைநம்பிக்கையை இதயத் தில் நிரப்பும் ஆன்மீக நிலையங்களாகத் திகழ்கின்றன.

## பிறரை நற்பாக்கியத்துடன் வாழச் செய்யுங்கள்

வோல்டர் எனும் அறிஞர் கூறுகிறார்: பிற மக்கள் நற்பாக்கியத்துடன் வாழ்வதற்கு ஒரு மனிதன் வழிவகை செய்தால் அவன் **நற்பாக்கியம் பெறுவது** உறுதியாகிறது. (அல் வத்தன் நாளிதழ்)

இதுதான் உண்மை. ஆகையால்தான் - பரஸ்பர சமூக ஒத்துழைப்பு, ஏழை எளியோருக்கு உதவு வது, துன்பந்துயரங்களுக்கு உள்ளான மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதுபோன்ற ஏற்பாடுகளின் மூலம் இஸ்லாம் தன்னைப் பின்பற்றும் **மக்களின் நற்பாக்கியத்திற்குப்** பொறுப்பு ஏற்கிறது.

எனவேதான் பொருளாதாரத் தன்னிறைவு பெற்றோர் மீது, ஆண்டு தோறும் ஒரு சிறிய தொகையை ஏழை எளியோருக்கு ஜகாத் - கட்டாயத் தர்மம் வழங்கிட வேண்டும் என்று இஸ்லாம் கடமையாக்கியுள் ளது. இது, அவரது செல்வத்தைச் சுத்தப்படுத்தக் கூடியதாகவும் ஏழைகள் மீது கருணை செய்வ தாகவும் இருக்கிறது. வறுமை மற்றும் வேலையின்மையால் மனித சமுதாயங்கள் சந்தித்துக்கொண்டி ருக்கும் சிக்கல்களைத் தீர்ப்பதற்காக இறைவனால் ஏற்பாடு செய்யப்பட்ட வழிமுறையாகவும் இது திகழ்கின்றது.

## பசியால் வாடும் மக்களை நினைத்துப் பாருங்கள்

மனித குலம் இதய சுத்தியுடனும் உடல் ஆரோக்கியத்துடனும் வாழ்வது, **நற்பாக்கியத்தை** உறுதிப் படுத்தும் காரணிகளில் உள்ளவையாகும். இதனால்தான் ஆண்டில் குறிப்பிட்ட ஒரு மாதத்தில் நோன்பு நோற்பதை அல்லாஹ் கடமையாக்கி உள்ளான். அதுதான் ரமளான் மாத நோன்பு.

நோன்பு என்பது, அதிகாலை உதயத்திலிருந்து சூரியன் மறையும் வரையில் உண்ணாமல் பருகாமல் இருப்பதாகும். சக்தி பெற்றவர்களின் மீது நோன்பை அல்லாஹ் கடமையாக்கினான். இதன் நோக்கம், ஏழைகளின் கஷ்டத்தை அவர்கள் நினைத்துப் பார்க்க வேண்டும் என்பதாகும். அத்துடன் ஒரு முஸ்லிம் தன் இரட்சகனுக்குக் கீழ்ப்படிந்து வாழ்கிறானா என்பதை இறைவன் சோதித்துப்பார்ப்பதும் அந்த நோக்கத் தில் சேரும்.

அதிலும் குறிப்பாக நோன்பு என்பது ஓர் இரகசிய வழிபாடு ஆகும். ஒருவன் நோன்பு நோற்றிருப்பது பிறருக்குத் தெரிவதில்லை. ஆம்! ஒரு மனிதனை - அவனுடைய எல்லா நிலைகளிலும் கண்காணிக்கக் கூடிய மனிதர் யாருமில்லை, அல்லாஹ் ஒருவனைத் தவிர!

## உலகளாவிய மாநாடு

மனிதர்கள் - நிறத்தால், மொழியால், பிரதேசத்தால் மாறுபட்டிருப்பதுடனே அனைவரும் பூமியின் ஒரு பாகத்தில் ஒன்றுகூடுகிறார்கள். ஒரே இறைவனிடத்தில் பாவமன்னிப்பு கோருகிறார்கள்., இவ்வாறு உலகளா விய மாநாடு போன்று அனைவரும் ஒன்றுகூடி நிறைவேற்றும் கிரியைகளுக்குத்தான் ஹஜ் என்று அல்லாஹ் பெயர் சூட்டியுள்ளான்.

ஹஜ்ஜின் காலகட்டத்தில் ஒவ்வொரு ஹாஜியும் -முன்பு வாழ்ந்து சென்ற இப்ராஹீம் நபி, மூஸா நபி, ஈஸா நபி, முஹம்மது நபி (ஸல்) போன்ற கண்ணியத்திற்குரிய நபிமார்கள் பாதம் பதித்த இடங்களில் பாதம் பதிக்கிறார்கள்.

ஹஜ் செய்வது, மக்கமா நகர் சென்று திரும்பும் ஆற்றல் பெற்றவர்கள் மீது ஆயுளில் ஒருமுறை கடமை ஆகும். திருமக்கா நகரில் குறிப்பிட்ட சில அமல்களை - குறிப்பிட்ட சில ஒழுங்குமுறைப்படி நிறைவேற்றுவதே ஹஜ் ஆகும்.

## நற்பாக்கியத்தின் பக்கம் உங்களுக்கு வழிகாட்டுபவர்

பெர்னாட்ஷா கூறுகிறார்: நான் இஸ்லாத்தையும் முஹம்மதின் ஆளுமையையும் ஆராய்ந்தேன். பிரகாச மான மகத்தான ஆளுமைக்குச் சொந்தக்காரர் அவர். எதிரிகள், என்னென்ன அவதூறுகளை சுமத்து கிறார்களோ அவற்றை விட்டும் முஹம்மது நபியவர்கள், வெகுதூரமாக இருப்பதைக் காண முடிந்தது. மனித சமுதாயத்தைக் காப்பாற்ற வந்தவர், மீட்கவந்தவர் என்று அவருக்குப் பெயர் சூட்டுவது கடமை யாகும். (ஆதாரம்: இஸ்லாம் டுடே வெப்சைட்)

அரபியர் அரபியரல்லாதார் உள்பட எல்லா மனிதர்களுக்கும் வழிகாட்டக்கூடியவராகவும் நற்செய்தி சொல்ப வராகவும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவும் முஹம்மது நபி(ஸல்) அவர்களை அல்லாஹ் அனுப்பி வைத்து இருக்கிறான். இறைவனிடமிருந்து அவர்கள் கொண்டு வந்த தூதுச்செய்தி, மனிதர்கள் அனைவருக் கும் ஓர் அருட்கொடையாகத் திகழ்ந்து கொண்டிருக்கிறது. சட்ட விதிமுறைகளில் ஒருசில மாற்றங்கள் இருந்தாலும் -முன்னர் தோன்றிய நபிமார்கள் இவ்வுலகிற்குச் சமர்ப்பித்த முந்தைய தூதுச்செய்தியாகவே அது திகழ்கிறது. எனவே அருளிரக்கம் மிக்க இந்த இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மீது நம்பிக்கை கொள்ளாத வரையில், அவர்கள் கொண்டு வந்த வழிகாட்டலின்படி அமல் செய்யாத வரையில் எந்த மனித னும் உண்மையான நற்பாக்கியத்தை அடைந்திட முடியாது!

## அறிவுக்குச் சுதந்திரம் அளியுங்கள்

உண்மையான செல்வம் என்பது அறிவுச்செல்வம்தான். அறிவு என்பது, இப்பேரண்டத்தைப் படைத்த இறைவன் இம்மனித குலத்திற்கு வழங்கியுள்ள அருட்கொடைகளில் முக்கியமான ஓர் அருட்கொடை யாகும். அறிவின் மூலம்தான் ஏனைய உயிரினங்களை விட்டும் மனிதர்களை இறைவன் வேறுபடுத்தியுள் ளான். மேலும் வாழும் பாதையைத் தேர்வு செய்வதற்கான சுயவிருப்பத்தையும் அற்றலையும் அவர் களுக்கு வழங்கியுள்ளான். அது மட்டுமல்ல நற்பாக்கியத்தை அடையும் பாதை எது, துர்ப்பாக்கியத்தில் சேர்க்கும் பாதை எது என்று நபிமார்களின் மூலம் அவர்களுக்குத் தெளிவுபடுத்தியும் இருக்கிறான்.

எவர்கள் அநாச்சாரங்களில் இருந்தும் அல்லாஹ் அல்லாதவர்களுக்கு அடிமைப்படுவதில் இருந்தும் தமது அறிவுக்குச் சுதந்திரம் அளித்தார்களோ அவர்கள் தான் நற்பாக்கியத்தின் பக்கம் வழிகாட்டப்பட்ட வர்கள் ஆவர். ஆனால் எவர்களை அவர்களின் அறிவு, இறைநிராகரிப்பின் பக்கமும் மறுவுலகின் மீதான அவ நம்பிக்கையின் பக்கமும் இழுத்துச் சென்றதோ அவர்கள் திண்ணமாக துர்ப்பாக்கியத்தின் பாதை யைத் தேர்வு செய்தவர்கள் ஆவர்.

இதேபோன்று மனித அறிவுக்கு சில வரம்புகளை இறைவன் அமைத்து வைத்துள்ளான். அவற்றை மீறிச் செல்ல மனித அறிவால் முடியாது. மேலும் சில விஷயங்களை - அறிவின் நலன் கருதி அல்லாஹ் மறைத்து வைத்துள்ளான். அத்தகைய மறைவான உண்மைகளை நம்புவது நமது கடமையாகும்., அவற்றை நாம் கண்ணால் பார்க்க முடியாவிட்டாலும் சரியே! கணித மேதை பாஸ்கால் என்பர் கூறுகி றார்:

அறிவின் பிரம்மிப்பூட்டும் செயல்பாடு என்னவெனில்,அதற்குச் சில வரம்புகள் உள்ளன என்று அறிவைப் பயன்படுத்தி நாம் கணிக்கின்றோமே அதுதான் (நூல் : சுதந்திரக் கலைக்களஞ்சியம்)

ஆழமாகச் சிந்திப்பதற்கும், முன்னேற்றத்திற்கு வழிகோலும் விமர்சனத்தை மேற்கொள்வதற்கும் தாராள மான இடத்தை அறிவுக்குக் கொடுத்துள்ளது இஸ்லாம். மனித குலத்திற்குப் பயன் அளிக்கக்கூடிய எல்லாத் தளங்களிலும் புதுமையைத் தோற்றுவிக்கவும் புதுமையாகச் சிந்திக்கவும் இஸ்லாம் அறிவுக்கு அனுமதி வழங்கியுள்ளது.

## இறைவனையே முழுவதும் சார்ந்து வாழுங்கள்

நற்பாக்கியத்தை விரும்பும் ஒருவர் எப்படி வாழ வேண்டும்? தான் எதிர்பார்க்கும் நல்விளைவுகளின் பால் சேர்க்கக்கூடிய காரணிகளை மேற்கொண்ட பிறகு அவர், அல்லாஹ் ஒருவனையே முழுவதும் சார்ந்து வாழ் வது அவசியம். அல்லாஹ்வையே முழுவதும் சார்ந்து வாழ்வதுதான் பலவீனமான இந்த மனிதப் படைப்பினத் தின் புகலிடம் ஆகும். வாழ்க்கையில் புயற்காற்றுகளை எதிர்கொள்ள நேரிட்டால், இருள்கள் தன் பக்கம் மனிதனை இழுத்துக்கொள்ள முனைந்தால் அந்த இறைவனிடம் மட்டுமே அவன் தஞ்சம் அடைந்திட வேண்டியுள்ளது. அவ்வாறு தஞ்சம் அடையவில்லையெனில் வாழ்க்கைப் பாதையில் தட்டுத்தடுமாறிச் செல்லும் மனிதனாகத் தன்னை அவன் உணர்ந்திட வேண்டி வரும். தனக்கு ஓர் இலட்சியம் இருப்பது அவனுக்குத் தெரியாமல் போகும். தனது வாழ்க்கைக்கு ஓர் உரைவிடமும் மகிழ்ச்சியும் இருப்பதையும் அவன் அறிந்திட மாட்டான். எனவே உங்கள் இதயத்தை அல்லாஹ்வுடன் தொடர்பு கொண்டதாக ஆக்குங்கள்., நீங்கள் பயணிக்கும் பாதையை அது வெளிச்சம் போட்டுக் காட்டும்.

## மகிழ்ச்சிக்குரிய நமது பெருநாட்கள்

முஸ்லிம்கள் இரண்டு பெருநாட்களை மகிழ்ச்சியுடன் கொண்டாடுகிறார்கள். ஒன்று நோன்புப் பெரு நாள். மற்றொன்று ஹஜ்ஜு ப் பெருநாள். இவ்விரு பெருநாட்களையும் இறைவன் அனுமதித்திருப்பதன்

நோக்கம், அவன் பொழிந்த அருட்கொடைகளை மனிதன் வெளிப்படுத்துவதும் அன்பு மற்றும் உறவின் தொடர்புகளைப் புதுப்பிப்பதும் மற்றும் முஸ்லிம்களுக்கு மத்தியில் சமூக ரீதியான ஒற்றுமையை உறுதிப்படுத்திக் கொள்வதும் ஆகும்.

**இக்ரஃ - படிப்பீராக!**

நம்முடைய நபி முஹம்மது (ஸல்)அவர்களின் மீது அல்லாஹ் இறக்கியருளிய முதல் வசனம் இக்ரஃ - படிப்பீராக என்பதுதான். படிப்பதன் முக்கியத்துவத்தை இது உணர்த்துகிறது. படிப்பதுதான் - வாசிப்பது தான் கல்வியின் திறவுகோல் ஆகும். மேலும் ஷரீஅத் சட்டங்களைக் கற்பதற்கு அல்லாஹ் ஆர்வமூட்டியுள்ளான். எடுத்துக்காட்டாக, உளு செய்வது எப்படி? தொழுவது எப்படி, நோன்பு நோற்பது எப்படி? ஏன்று கற்றிடவும் பொருளாதாரக் கொடுக்கல் வாங்கலின் நெறிமுறைகள் யாவை எனும் சட்டங்களைக் கற்றிடவும் ஆர்வமூட்டியுள்ளான்! இதேபோல கல்வி தொடர்பான பயனுள்ள எல்லாத் துறைகளிலும், அறிவியல் ரீதியிலான எல்லாக் களங்களிலும் கல்வியைத் தேடவும் அதிக அளவில் அதை வளர்த்துக் கொள்ளவும் இஸ்லாம் நல்லார்வம் ஊட்டியுள்ளது.

**நற்பாக்கியத்தின் தலைவாசல்**

அஷ்ஹது அ(ன்ல்) லாஇலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் (வணக் கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை என்றும் முஹம்மது நபி அல்லாஹ் வின் தூதர் என்றும் நான் சாட்சியம் சொல்கிறேன்) என்கிற கலிமாதான் இஸ்லாத்தில் இணைவதற்கும் நற்பாக்கி யத்தை அடைவதற்குமான முதல் தலைவாசல் ஆகும். எவர் இந்தக் கலிமாவின் பேரில் நம்பிக்கை கொண்டு இதனை மொழிந்தாரோ மேலும் இந்தக் கலிமாவின் தேட்டப்படி அமல் செய்தாரோ, மரணம் வரையிலும் அதில் நிலைத்திருந்தாரோ அவர் சுவனம் செல்வார். அதன் மூலம் நீடித்த நிலையான சுவனத் தோட் டங்களில் நிரந்தரமான உண்மையான நற்பாக்கியம் அவருக்குக் கிடைக்கும்.

எனவே என் அன்புச் சகோதரரே! சரியானதொரு முடிவுக்கு வர நீங்கள் உறுதிகொள்ள வேண்டாமா? அதிகப்பயன் அளிக்கும் ஆக்கப்பூர்வமான செயல் எதுவெனில், உரிய நேரத்தில் மேற்கொள்ளும் நற்சிந்தனை தான்! நல்ல முடிவுதான்! எனவே உங்களுக்கு நாம் கூறும் அறிவுரை இதுதான்:

இவ்வுலகத்தின் தண்டனையில் இருந்தும் மறுமையின் நரகத்தில் இருந்தும் உங்களுக்கு நீங்கள் விடுதலை அளித்துக்கொள்ளுங்கள். மேலும் இவ்வுலகத்தை விட்டும் பிரிந்து செல்வதற்கு முன்னால் இஸ்லாத் தில் சேர்ந்து இறைவழிபாட்டை மேற்கொள்ளுங்கள்.

மேலும் உங்களுக்குச் சொல்லும் அறிவுரை என்னவெனில், அருகிலுள்ள ஏதேனும் இஸ்லாமிய அமைப்பு டன் தொடர்பை ஏற்படுத்திக்கொள்ளுங்கள் அல்லது நம்பிக்கைக்குரிய இஸ்லாமிய இணைய தளம் ஒன்றுடன் தொடர்பு வையுங்கள். அதன் மூலம் இஸ்லாமிய விஷய ஞானங்களைப் பெருக்கிக் கொள்ளுங்கள். அல்லது இங்கு கொடுக்கப்பட்டுள்ள மின் அஞ்சல் முகவரி மூலம் எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள். உங்களுக்கு வேண்டிய விளக்கத்தையும் தெளிவையும் அளிப்பதற்கு நாங்கள் எந்நேர மும் தயாராக இருக்கிறோம். அல்லாஹ் நம் அனைவருக்கும் நற்பாக்கியம் வழங்குவானாக!

# كيف تكون مسلما حقا ؟

# நீங்கள் உண்மை முஸ்லிமாக ஆகுவது எப்படி?

இஸ்லாம் மார்க்கத்தை மட்டும்தான் மனித குலத்திற்காக அல்லாஹ் பொருந்திக் கொண்டுள்ளான். அதனை விடுத்து வேறு எந்த மார்க்கத்தையும் மனிதர்களிடம் இருந்து அல்லாஹ் ஏற்றுக்கொள்ள மாட்டான். திருக்குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : ومن يبتغ غير الإسلام دينا فلن يقبل منه وهو في الآخرة من الخاسرين (آل عمران الآية : ٨٥)

இஸ்லாம் (இறைவனுக்குப் பணிந்து வாழுதல்) எனும் மார்க்கத்தை விடுத்து வேறொரு மதத்தை யாரே னும் ஒருவர் மேற்கொள்வாராயின் அவரிடமிருந்து ஒருபோதும் அது ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. மறுமை நாளில் நஷ்டம் அடைந்தவர்களில் ஒருவராகத்தான் அவர் இருப்பார் (3 : 85)

எனவே அன்புச் சகோதரரே! உங்களை ஒரு முஸ்லிமாக, ஓரிறைக்கொள்கை உடையவராக அல்லாஹ் ஆக்கியிருக்கிறான். சிலைவணங்கியாகவோ கிறிஸ்தவராகவோ யூதராகவே ஆக்கவில்லை. இதற்காக அல்லாஹ் வுக்கு நன்றி செலுத்துவதும் புகழ்வதும் உங்கள் மீது கடமையாகும்.

உண்மையான முஸ்லிம் யார் எனில், எவர் அல்லாஹ் - ரஸூ லின் கட்டளைகளுக்கு முழுமையாக அடி பணிகிறாரோ, ஷிர்க் - இணைவைப்பில் இருந்தும் அதன் காரணிகளில் இருந்தும் முழுமையாக விலகி வாழ்கி றாரோ அவர்தான் உண்மையான முஸ்லிம்.

எத்தனையோ பேர் தங்களை முஸ்லிம்கள் என்று சொல்லிக்கொள்கிறார்கள்., ஆனால் அவர்களின் செயல் களும் குணங்களும் இஸ்லாத்தை விட்டும் வெகுதூரமாக உள்ளன. அதன் காரணம் - ஒன்று: அறியாமை., இன்றைக்கு முஸ்லிம்களிடம் பரவலாகக் காணப்படுவது இதுதான். அல்லது அலட்சியம் - பொடுபோக்கு.

நமது வாழ்க்கையில் இஸ்லாத்தை உறுதிப்படுத்தக்கூடிய சில வழிகாட்டல்களை இங்கு நினைவூட்ட விரும்புகிறோம். அத்துடன் சில முஸ்லிம்களிடம் காணப்படும் சில தவறுகளைக் குறித்து எச்சரிக்கை செய்ய வும் இருக்கிறோம்.

## இறைநம்பிக்கை எனும் உறுதியான பிடிமானம்

உண்மை முஸ்லிம் யார் எனில், எவர் இஸ்லாத்தையும் முஸ்லிம்களையும் நேசிக்கிறாரோ மேலும் அல்லாஹ் வின் மார்க்கத்தின் பக்கம் மக்களை அழைகிறாரோ அவர்தான் உண்மையான முஸ்லிம்!

இறைநிராகரிப்பாளர்களின் நிராகரிப்பு குறித்து அதிருப்தி அடைகிறாரோ, மேலும் தனது விருப்பையும் வெருப்பையும் அல்லாஹ்வுக்காக என்றே- அவனது உவப்பைப் பெறுவதற்காக என்றே அமைத்திருக்கிறாரோ, இஸ்லாம் அளிக்கும் கண்ணியமே தனது கண்ணியம் என்று உணர்கிறாரோ அவர்தான் உண்மை முஸ்லிம்! முஸ்லிம்களுக்கு நேரும் துன்பங்களைக் கண்டு மனம் இரங்கி - அவர்களின் நாடு எவ்வளவு தூரத்தில் இருந்தாலும், அவர்களின் இனம், குலம் கோத்திரம் எதுவாக இருந்தாலும் - தம்மால் முடிந்த வரை அந்த முஸ்லிம்களுக்கு உதவு செய்பவர்தான் உண்மையான முஸ்லிம்!

அபூ லஹப் என்பவன் நபி(ஸல்) அவர்களின் பெரிய தந்தைதான், அவனது வம்ச உறவும் பண பலமும் இனத் தொடர்பும் அவனுக்கு எந்தப் பயனும் அளிக்கவில்லை. அவன் மேற்கொண்ட இறைநிராகரிப்பு மற்றும் பிடிவாதம், புறக்கணிப்பு ஆகிய போக்குகளினால் - அல்லாஹ்வின் பாதையில் செல்லவிடாமல் மக்களை அவன் தடுத்த காரணத்தினால் அவனுக்கு நரகம்தான் என்று அல்லாஹ் தீர்ப்பளித்தான். ஆனால் கருப்பு நிற ஏழை அடிமை பிலால் (ரலி) அவர்கள் சுவன பாக்கியம் பெற்றார்கள். அதற்குக் காரணம் ஈமான் எனும் இறைநம்பிக்கையும் அதனைப் பாதுகாப்பதற்காக அவர்கள் மேற்கொண்ட பொறுமையும்தான்!

## ஷைத்தானுக்கு கீழ்ப்படியாதீர்!

உண்மையான முஸ்லிம் யார்? எவர் ஷிர்க் எனும் இணைவைப்பை விட்டும் அதில் கொண்டு சேர்க்கும் காரணிகளையும் விட்டும் விலகினாரோ அவர்தான் உண்மை முஸ்லிம்! எவ்வாறு இப்றாஹீம் நபி (அலை) அவர்கள் தம்மையும் தமது சந்ததிகளையும் சிலைவழிபாட்டிலிருந்து விலக்கி வைக்குமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தார்களோ, எவ்வாறு முஹம்மது நபி (ஸல்) அவர்கள் ஷிர்க்கை பற்றி தமது சமுதாய மக்களுக்கு எச்சரிக்கை செய்தார்களோ அவ்வாறு வாழ்பவர்தான் முஸ்லிம்.

ஏனெனில் ஷிர்க் - இறைவனுக்கு இணைவைப்பது மிகப் பெரிய அநீதியாகும். அதனை அல்லாஹ் மன்னிக்கவே மாட்டான். ஒருவர் ஷிர்க்கான செயல்களைச் செய்துகொண்டு தானும் முஸ்லிம்தான் என்று கருதுகிறார் எனில், ஷிர்க் செய்வது பெரும் பாவம் என்று நிரூபிக்கும் தெளிவான ஆதாரம் அவரிடம் சென்று சேர்ந்த பிறகும் ஷிர்க் செய்துகொண்டு அதிலேயே மரணம் அடைந்தார் எனில் அவர் நரகவாசிதான்! நம் அனைவரையும் அதிலிருந்து அல்லாஹ் காப்பாற்றுவானாக! ஏனெனில் திருக்குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : إن الله لا يغفر أن يشرك به ويغفر مادون ذلك لمن يشاء

நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை ஒருபோதும் மன்னிக்க மாட்டான். அதைத் தவிர உள்ள ஏனைய பாவங்களை - தான் நாடுகிறவர்களுக்கு மன்னிப்பான்.

قال النبي ﷺ : خبئت دعوتي لأمتي يوم القيامة شفاعتي فهي نائلة إن شاء الله لكل من مات ولم يشرك بالله شيئا– متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எனக்கு வழங்கப்பட்ட பிரத்தியேகப் பிரார்த்தனையை என்னுடைய சமு தாயத்தினருக்காக நான் மறைத்து வைத்திருக்கிறேன். எனது பரிந்துரை - இறைவனுக்கு இணை வைக்காமல் வாழ்ந்து மரணம் அடைந்த ஒவ்வொருவரையும் சென்றடையும், இன்ஷாஅல்லாஹ்! (புகாரி, முஸ்லிம்)

## இன்றைய முஸ்லிம்களிடம் காணப்படும்
## ஷிர்க் - இணைவைப்புச் செயல்கள்

(1) மண்ணறைகளை வலம் வருதல், அங்கு அடக்கம் செய்யப்பட்டிருப்பவர்ளைக் கொண்டு பரகத் நாடுதல்.

(2) இறந்தவர்களிடம் இரட்சிக்கத் தேடுதல், அவர்களிடம் பிரார்த்தனை செய்து அதன் மூலம் அல்லாஹ்வின் பக்கம் நெருங்கிச் செல்லலாம் என செயல்படுதல், இறந்தவர்களிடம் நோய் நிவாரணத்தையும் ரிஜ்க் எனும் உணவையும் பிற பாக்கியங்களையும் தேடுதல்! மண்ணறைகளில் அடக்கம் செய்யப்பட்டவர்களின் உண்மை நிலை என்னவெனில், அவர்கள் எதையும் செவிமடுப்பதில்லை. செயிமடுப்பதாக (ஒருவாதத்திற்கு) வைத்துக் கொண்டாலும் (பிரார்த்தனை செய்பவர்களுக்கு) எந்த உதவியும் அவர்களால் செய்ய முடியாது!

(3) இறந்தவர்களுக்காக நேர்ச்சை நிறைவேற்றுதல், பிராணிகளை அறுத்துப் பலியிடுதல், பழங்கள் பூக்கள் போன்ற காணிக்கைகளை சமர்ப்பித்தல்.

(4) அல்லாஹ்வின் ஷரீஅத்தை விடுத்து வேறு நபர்களிடம் சென்று சண்டைகளை - வழங்குகளைச் சொல்லி தீர்ப்பைத் தேடுதல்.

(5) சான்றோர்கள் மற்றும் நபிமார்களின் விஷயத்தில் வரம்பு மீறிய போக்கை மேற்கொள்ளுதல் அதாவது, வழிபடுதல், அஞ்சுதல், ஆதரவு வைத்தல் மற்றும் பிரார்த்தித்தல் போன்ற இறைவனிடம்

மட்டுமே சமர்ப்பிக்கப் படும் காரியங்களை நல்லடியார்களின் பெயரில் - நபிமார்களின் பெயரில் சமர்ப்பித்தல்

## இறைவனையே முழுவதும் சார்ந்து வாழுங்கள்!

உண்மையான முஸ்லிம் யார்? அவரது உள்ளம் அல்லாஹ்வுடன் மட்டும்தான் தொடர்பு கொண்டிருக்கும். எனவே தன்னைப் பொறுத்தும் தன்னுடைய பிள்ளைகளைப் பொறுத்தும் தாயத்துகளையோ ஓதி முடிந்த கயிறுகளையோ மாலைகளையோ -ஏதாவது லாபம் நஷ்டங்களைக் கருத்தில்கொண்டு பயன்படுத்த மாட்டார். இவற்றினால்தான் லாபமும் நஷ்டமும் ஏற்படுகின்றன என்று நம்பி இவற்றைப் பயன்படுத்துபவன் நிச்சயமாக அல்லாஹ்வுடன் -பெரிய அளவிலான இணைவைப்பை செய்தவனாக ஆகிவிடுவான். அதனால் இஸ்லாத்தை விட்டே அவன் வெளியேறியவன் ஆகிறான்.

ஆனால் இவை எல்லாம் ஒரு காரணம்தான்., இவற்றினாலேயே லாபம் நஷ்டம் உண்டாகுவதில்லை என்று நம்பி இவற்றை ஒருவன் பயன்படுத்தினால் பெரிய அளவிலான பித்அத் செய்தவன் ஆவான். உடனே அதில் இருந்து பாவமன்னிப்புத் தேடுவது கடமையாகும். அந்தக் கயிறுகளையும் தாயத்களையும் உடனே கழற்றி எறிந்திட வேண்டும். நிச்சயமாக அவை நோயாளிக்கு மேலும்மேலும் நோயைத்தான் அதிகரிக்கச் செய்யும்! இவ்வாறே நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களில் பதிவாகியுள்ளது. எனவே உண்மையான முஸ்லிம், அல்லாஹ்வையே முழுவதும் சார்ந்து வாழ்வான். அந்த வகையில் ஷரீஅத்தில் அனுமதிக்கப்பட்டுள்ள திக்ர்களை ஓதிப் பாதுகாப்புத் தேடிக் கொண்டிருப்பான்.

## தொழுகைக்குப் பிறகு ஓதும் திகர்கள்

(1) ஆயத்துல் குர்ஸி (அல்லாஹுؤ லாஇலாஹ இல்லாஹுؤ வல் ஹய்யுல் கய்யூம் லா தஃகுதுஹுؤ ஸினத்து (ன்வ்) வலா நவ்ம் ...) திருக்குர்ஆன் அத்: 2 ஆயத் எண் 254)

(2) அல்பகறா அத்தியாயத்தின் கடைசி ஆயத் (ஆமனர் ரஸூ லு பிமா உன்ஸில இலைஹி மிர் றப்பிஹி ...)

(3) ஹஸ்பியல்லாஹுؤ லா இலாஹ இல்லாஹுؤ வ, அலைஹி தவக்கல்த்து வஹுؤ வ றப்புல் அர்ஷில் அழீம் (7 தடவை)

(4) குல் அஊது பிறப்பில் ஃபலக் - குல் அஊது பி றப்பின் நாஸ் இரண்டு சூராக்களையும் (3 தடவை)

(5) பிஸ்மில்லாஹில்லதீ லா யளுர்ரு மஅஸ்மிஹி ஷைஉன் ஃபில்அர்ளி வலா ஃபிஸ் ஸமாஇ வஹுؤ வஸ் ஸமீஉல் அழீம் (3 தடவை)

(6) அஊது பி கலிமாத்தில்லாஹித் தாம்மாத்தி குல்லிஹா மின் ஷர்ரி மா ஃக்கலக் (3 தடவை)

(7) லா இலாஹ இல்லல்லாஹுؤ வஹ்தஹுؤ லா ஷரீக்கலஹுؤ , லஹுؤ ல் முல்க்கு வலஹுؤ ல் ஹம்து வஹுؤ வ அலா குல்லி ஷையின் கதீர் (100 தடவை)

## செவியேற்றல், கீழ்ப்படிதல்

உண்மை முஸ்லிம் யார் எனில், அல்லாஹ் விதித்த வரம்புகளைப் பேணிநடப்பவர்தான் உண்மை முஸ்லிம். ஒரு பிரச்சனையில் அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் தீர்ப்பளித்திருப்பது அவருக்குத் தெரிய வந்தால் உடனே அதற்குக் கீழ்ப்படிவார். அதை விடுத்து பிறருடைய தீர்ப்புகளின் பக்கம் கவனம் செலுத்த மாட்டார்.

ஆனால் இன்றைய முஸ்லிம்களில் பெரும்பாலோர் மனஇச்சையைப் பின்பற்றுதல்,வழிதவறிய கூட்டங்களைப் பின்பற்றுதல், தனிப்பட்ட மனிதர்களின் கருத்துகளைப் பின்பற்றுதல் எனும் பெரும் சோதனைக்கு உள்ளாக் கப்பட்டிருப்பதுதான் - முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வழிமுறையை இவர்கள் புறக்கணித்து விட்டார்கள் என்பதுதான் மிகவும் கவலைக்குரிய விஷயமாகும்.

## மக்களுக்கு தீங்கு செய்யாதிருப்பது

யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யாமல் வாழ்வதுதான் தர்மங்களிலேயே சிறந்த தர்மமாகும். எந்த முஸ்லிம், நாவு மற்றும் கைகளினால் பிற முஸ்லிம்களுக்கு எந்தத் தீங்கும் செய்யாமல் வாழ்கிறாரோ - எவர் மீதும் பொறாமை கொள்ளாமலும் மோசடி செய்யாமலும் எவரையும் கேலி பரிகாசம் செய்யாமலும் இருக்கி றாரோ அவர்தான் உண்மையான முஸ்லிம்.

## இறைவனே நோயைக் குணப்படுத்துபவன்

உண்மை முஸ்லிம் யார் எனில், ஜோசியர்கள், சூனியக்காரர்கள், ஓதி எழுதிப்பார்த்து குறிசொல்வோர் ஆகிய எவரிடமும் செல்லாமல் இருப்பவர்தான் உண்மையான முஸ்லிம். நபி (ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள்:

فقد صح عن حبيبنا محمد ﷺ أنه قال : من أتى كاهنا أو عرافا فصدقه بما يقول فقد كفر بما أنزل على محمد (الحاكم)

“ஜோசியனிடமோ நட்சத்திரம் பார்த்துக் குறிசொல்பவனிடமோ ஒருவர் சென்று அவர்கள் சொல்வதை நம்பினால் அவர், முஹம்மத் (ஸல்) அவர்களின் மீது இறக்கியருளப்பட்ட ஷரீஅத்தை நிராகரித்து விட்டார்”

உண்மையான முஸ்லிம் என்பவர், இறைவனிடம் மட்டுமே அடைக்கலம் புகுவார். அவனிடம் இருந்தே சுக வாழ்வை எதிர்பார்ப்பார். அல்லாஹ் விதித்த விதியின் பேரில் பொறுமையை மேற்கொண்டு அதற்கான கூலியை யும் அவனிடம் மட்டுமே எதிர்பார்ப்பார். மேலும் நபி (ஸல்) அவர்களுக்கு எந்த வழிமுறையை அல்லாஹ் ஷரீஅத்தாக ஆக்கியுள்ளானோ அத்தகைய திக்ர்கள் மற்றும் மருந்துகளின் மூலம் மட்டுமே மருத்துவம் செய்து நோயைக் குணப்படுத்துவார்.

## நோயாளி ஓதும் நபிமருத்துவ திக்ர்கள்

(1) ஃபாத்திஹா சூரா (7 தடவை) ஓத வேண்டும்.
(2) குல்ஹுவ வல்லாஹு அஹத், குல் அஊது பிறப்பில் ஃபலக், குல் அஊது பி றப்பின் நாஸ் ஆகிய மூன்று சூராக்களையும் (3 தடவை) ஓத வேண்டும்.
(3) பிஸ்மில்லாஹ் (3 தடவை) ஓத வேண்டும்.
(4) அஊது பில்லாஹி வ குத்றத்திஹி மின் ஷர்ரி மா அஜிது வ உஹாதிர் (7 தடவை) ஓத வேண்டும்.
(5) அஊது பில்லாஹித் தாம்மத்தி மின் குல்லி ஷைத்தானின் ஹாம்மத்தின் வ மின் குல்லி ஐனின் லாம் மாஹ் என்று ஓத வேண்டும்.
(6) அஊது பி கலிமாத்தில்லாஹித் தாம்மாத்தி குல்லிஹா மின் ஷர்ரி மா ஃகலக் என்று ஓத வேண்டும்.
(7) அஸ்அலுல்லாஹல் அழீம் றப்பல் அர்ஷில் அழீம் அ(ன்ய்) யஷ்ஃபஅனி என்று ஓத வேண்டும்.
(8) நிவாணத்தை நிய்யத் வைத்து, குர்ஆனிலிருந்து இலகுவான ஆயத்களை சூராக்களை ஓத வேண்டும்.
(9) முடிந்தால் ஜம்ஜம் நீரை அருந்தவும்.

## சத்தியம் செய்வதில் ஷிர்க்

உண்மை முஸ்லிம் அல்லாஹ்வின் பெயரைக் கொண்டு மட்டுமே சத்தியம் செய்வார். நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்:

قال النبي ﷺ :من كان حالفا فلا يحلف إلا بالله

**யாரேனும் சத்தியம் செய்வதாக இருந்தால் அல்லாஹ்வின் பெயரைக் கொண்டு சத்தியம் செய்யட்டும். மற்றவற்றைக் கொண்ட சத்தியம் செய்ய வேண்டாம்.**

எனவே நபியின் பெயரைச் சொல்லியோ கஃபாவின் மீது சத்தியமாக என்றோ வேறு எந்தப் பொருளைக் கொண்டும் சத்தியம் செய்வது கூடாது.

## உண்மையான அன்பு

உண்மையான முஸ்லிம், எந்த முறைப்படி அல்லாஹ்வை வணங்கிட வேண்டுமென நபி (ஸல்) அவர் களின் வாயிலாக அல்லாஹ் வகுத்துத்தந்தானோ அந்த முறைப்படி அல்லாஹ்வை வணங்கி வழிபடுவார். நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

قال النبي ﷺ : من أحدث في أمرنا هذا ما ليس منه فهو رد

**நமது மார்க்கத்தில் எவராவது புதிதாக ஒன்றைப் புகுத்தினாரோ அது ரத்து செய்யப்பட வேண்டியதாகும்.**

எனவே நபி முஹம்மது (ஸல்) அவர்கள் உங்களுக்குக் கட்டளை பிறப்பிப்பது என்ன? இறைத்தூத ராகிய அவர்களைப் பின்பற்றுமாறுதான் உங்களுக்குக் கட்டளை பிறப்பிக்கிறார்கள். புதிய அனுஷ்டானங்களை உருவாக்க வேண்டாம் என்றுதான் உங்களை எச்சரிக்கை செய்கிறார்கள்.

நீங்கள் எந்தப் பிரிவைச் சேர்ந்வர்? என்பதைச் சீர்தூக்கிப் பார்த்துக்கொள்ளுங்கள். முஹம்மது நபி (ஸல்) அவர்களை உண்மையாக நேசிக்கிறேன் என்று சொல்பவர், நபிவழியைத்தான் பின்பற்றுவார். நபியவர் களின் கட்டளைக்கு மாற்றமாக நடக்க மாட்டார். அத்துடன் நபித்தோழர்களையும் நேசிப்பார். நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்:

قال النبي ﷺ : عليكم بسنتي وسنة الخلفاء الراشدين المهديين من بعدي

எனது ஸு ன்னத்தையும் எனக்குப் பிறகு நேர்வழி பெற்று வாழும் என்னுடைய பிரதிநிதிகளின் ஸு ன்னத் தையும் பற்றிப்பிடித்து வாழுங்கள்

## சில முஸ்லிம்களிடம் உள்ள மோசமான பித்அத்கள்

(1) அடக்கத்தலங்களின் மீது திரைகளையும் தீபங்களையும் கட்டடங்களையும் அமைப்பது. இவை மிக மோசமான பித்அத் ஆகும். பெரிய அளவிலான ஷிர்க்கும் ஆகும்.
(2) அடக்கத்தலங்களுக்கு அருகில் மஸ்ஜித்களை கட்டுவது, அல்லது மஸ்ஜிதின் உள்ளேயே அடக்கத் தலங்களை அமைப்பது. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: **யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் அல்லாஹ் சபிப்பானாக! ஏனெனில் தங்களுடைய நபிமார்களின் அடக்கத்தலங்களை வழிபாட்டுத்தலங்களாக ஆக்கி விட்டார்கள்.** (நூல்: புகாரி, முஸ்லிம். அறிவிப்பு: ஆயிஷா (ரலி) - இது தொடர்பாக கருத்துரைக்கும்போது - அவ்விரு மதத்தவர்களும் செய்த செயல்ளைப் பற்றி நபியவர்கள் எச்சரிக்கை செய்தார்கள் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் குறிப்பிட்டார்கள்,
(3) கடமையான தொழுகைகளுக்குப் பிறகு எல்லோரும் கூட்டாக திக்ர் செய்வது. உண்மையான முஸ்லிம், ஆதாரப்பூர்வமாகப் பதிவாகியுள்ள திக்ர்களை தொழுகைக்குப் பிறகு ஓதுவார்தான், ஆனால் தனியாக பணிவு டனும் உள்ளச்சத்துடனும் ஓதுவார். இது பற்றி இந்த பிரசுரத்தின் இறுதியில் முழு விவரம் உள்ளது.
(4) இவ்வாறு ஜு ம்ஆ நாளின் பகலை அல்லது இரவை பிரத்தியேகமாக ஒதுக்கி எல்லோரும் கூட்டாக திக்ர் செய்வது, அந்நாளில் எல்லோரும் கூட்டாக கப்று ஜியாரத் செய்வது. உண்மையான முஸ்லிம்

எப்படி செய்ய வேண்டும்? ஆதரப்பூவமாகப் பதிவாகியுள்ள திக்ர்களை அவற்றிற்குரிய நேரங்களில் பணிவுடனும் உள்ளச்சத்துடனும் ஓதிட வேண்டும். மேலும் கப்றுகளை ஜியாரத் செய்வதானால் அங்கு சிறிது நேரம் நின்று ஸலாம் சொல்ல வேண்டும், இறந்தவர்களுக்காகப் பாவமன்னிப்பு வேண்டி துஆ செய்ய வேண்டும். பிறகு அங்கிருந்து வெளியேறிட வேண்டும்.

(5) ஷஃபான் மாதத்தின் 15 ஆம் இரவையே, மிஃராஜ் இரவையோ அல்லது நபிகளாரின் பிறந்த நாளையோ விழா எடுத்துக்கொண்டாவது.

(6) கிறிஸ்தவர்களின் திருவிழாக்களைக் கொண்டாடுவது, அந்த அவைகளில் சென்று அமர்ந்திருப்பது.

(7) அடக்கத்தலங்களை ஜியாரத் செய்வதற்கெனப் பயணம் மேற்கொள்வது.

## விபச்சாரம் மானக்கேடான செயல்

உண்மையான முஸ்லிம் என்பவர், மது அருந்தும் இடங்கள், விபச்சார விடுதிகள், இன்னிசைக் கச்சேரி கள், கூத்தாடும் இடங்கள் போன்ற கீழ்த்தரமான மோசமான இடங்களின் அருகில்கூட நெருங்கமாட்டார். அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:

قال الله تعالى : ولا تقربوا الفواحش ما ظهر منه وما بطن

**மானக்கேடான செயல்களின் அருகில்கூட செல்லாதீர்கள். அவை வெளிப்படையாக இருந்தாலும் மறை முகமாக இருந்தாலும் சரியே!** (6 : 151)

இந்த மோசமான இடங்களுக்கு அருகே செல்வதிலேயே அபாயங்களும் சோதனைகளும் உள்ளன என்றால் அவற்றில் வீழ்ந்தால் அது எவ்வளவு பெரிய கேடு என்பதைச் சொல்லவேண்டியதே இல்லை. எனவே ஒரு முஸ்லிம் இவ்வுலகத்தின் அற்ப இச்சைகளைப் பொறுத்து தனது மனத்தைப் பொறுமைப்படுத்து வது கடமை ஆகும். அப்போழுதுதான் நிரந்தரமான சுவனபதிகளில் தூய்மையான இன்பங்களை அடைந்திட முடியும். நிச்சயமாக அல்லாஹ், எந்தக் கண்ணும் கண்டிராத எந்தக் காதும் கேட்டிராத எந்த மனிதனின் உள்ளத்திலும் உதித்திருக்காத இன்பங்களை உண்மையான முஸ்லிமுக்காகத் தயார் செய்து வைத்துள் ளான்.

## கஞ்சத்தனம் செய்யாதீர்

உண்மையான முஸ்லிம் யார் எனில், தனது பணத்திற்கான ஜகாத்தை மனமுவந்து கொடுத்து விடுவார். நிச்சயமாக ஜகாத் தூய்மைப்படுத்துகிறது. பணத்தை அதிகப்படுத்தவும் செய்கிறது. யார் தனது சொத்திற்கு ஜகாத் கொடுக்கவில்லையோ அவர் இம்மையிலும் மறுமையிலும் நஷ்டம் அடைந்த வர்களில் ஒருவராவார்.

## ஆகுமான உணவுகளை உண்ணுங்கள்

உண்மையான முஸ்லிம் யார் எனில், தடைசெய்யப்பட்ட கொடுக்கல் வாங்கல்கள் விஷயத்தில் எச்சரிக்கையாக இருப்பார். வட்டி, மோசடி, இலஞ்சம், பொய் ஆகியவை போன்று! அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: எந்த உடல் தடைசெய்யப்பட்ட உண்வு உட்கொண்டு வளர்ந்ததோ அந்த உடலுக்கு நரகம்தான் மிகவும் பொருத்தமாகும்

## பெண்கள் சமுதாயமே!

நமது நபி (ஸல்) அவர்கள் சொல்லியுள்ளார்கள் : பெண்கள் விஷயத்தில் நல்லவிதமாக நடந்து கொள் ளுங்கள். மேலும் சொன்னார்கள்:எவர்கள் தம் மனைவியரிடம் சிறந்தவர்களாக இருக்கிறார்களோ அவர்கள் தான் உங்களில் சிறந்தவர்கள் ஆவர். மேலும் சொல்கிறார்கள்: எந்தப் பெண், கடமையான தொழுகை களை தொழுகிறாளோ ரமளான் மாதம் நோன்பு நோற்கிறாளோ மேலும் தன் கணவருக்குக் கீழ்ப்படிகிறாளோ அந்தப் பெண்ணிடம் சொல்லப்படும்: சுவனபதியின் எட்டு வாசல்களில் எந்த வாசல் வழியாக நீ பிரவேசிக்க விரும்புகிறோயோ அந்த வாசல் வழியாக சுவனத்தில் செல் என்று!

எனவே ஒரு முஸ்லிமான பெண்ணுக்குக் கடமை என்னவெனில், அல்லாஹ் விதியாக்கியுள்ள பர்தாவை கடைப்பிடிக்க வேண்டும். மேலும் தீன் - இறைமார்க்கத்தைக் கற்றுக்கொள்ள வேண்டும். இஸ்லாத்தின் அறிவுரைகளின்படி தன்னுடைய பிள்ளைகளுக்குப் பண்பாட்டுப் பயிற்சி அளித்திட வேண்டும். மேலும் முக்கிய மான தேவைகளை முன்னிட்டே வீட்டை விட்டு வெளியே செல்ல வேண்டும். தன்னையும் பிறரையும் குழப்பத் திற்கு உள்ளாக்காதிருக்க இந்த ஒழுக்க நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும். மேலும் அதிக அளவில் தான தர்மங்கள் செய்வதும் வணக்கவழிபாடுகளில் ஈடுபடுவதும் பர்தா அணியாமல் சுற்றித் திரியாதிருப்பதும் விலக்கப்பட்ட காரியங்களைத் தவிர்த்து வாழ்வதும் ஒரு முஸ்லிம் பெண்மணிக்கு அவசியமாகும். அப்பொழுது தான் அவள் நரகத்தில் இருந்து ஈடேற்றம் பெற்றிட முடியும். பெண்கள் சமுதாயத்தை நோக்கி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு எச்சரிக்கை செய்தார்கள்: பெண்களே! அதிக அளவில் தர்மம் செய்யுங்கள். ஏனெனில் நிச்சயமாக நான் உங்களில் பெரும்பாலானவர்களை நரகத்தில் வீழ்ந்திருக்கக் கண்டேன்.

## அமல்களிலேயே சிறந்தது தொழுகைதான்

உண்மை முஸ்லிம் யார் எனில், எவர் ஐங்காலத் தொழுகைகளை நேரப்படிப் பேணிவருகிறாரோ, மேலும் தம்முடைய பிள்ளைகள் ஏழு வயதை அடையும்போது அவர்களையும் தொழுகையை நிறை வேற்றும்படி ஏவுகி றாரோ அவர்தான் உண்மை முஸ்லிம். ஏனெனில் இந்தத் தொழுகைகளை பலதரப் பட்ட நேரங்களில் அல்லாஹ் கடமையாக்கியுள்ளான். அதன் நோக்கம் என்ன? முஸ்லிம்கள் அல்லாஹ் வின் விருப்பத்திற்கு முன்னுரிமை கொடுக்கிறானா அல்லது தன்னுடைய மனஇச்சைக்கு முன்னுரிமை

கொடுக்கிறானா என்று சோதித் துப் பார்ப்பதுதான் நோக்கம். இப்படிப்பட்ட மகத்தான கடமை விஷயத்தில் முஸ்லிம்களில் பெரும்பாலோர் பொடுபோக்க இருப்பதைக் கண்டு நீங்கள் கவலைப்பட வேண்டும். நபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள்:நமக்கும் பிறருக்கும் மத்தியில் பிரித்துக்காட்டும் எல்லைக் கோடு தொழுகைதான். யார் தொழுகையை விட்டு விட்டாரோ அவர் நிராகரிப்பாளராக ஆகிவிட்டார்.

எவர்கள் தொழுகையில் சோம்பலாக இருக்கிறார்களோ அவர்கள் வைல் எனும் நரக ஓடையில் தள்ளப் படுவார்கள் என்று அல்லாஹ் எச்சரிக்கை செய்துள்ளான். (வைல் எனும் அரபிச்சொல்லுக்கு இப்படித்தான் விளக்கம் கொடுத்துள்ளார்கள் பிரபல நபித்தோழர் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள்)

ஆனால் எவர்கள் தொழுகையை நிரந்தரமாகக் கடைப்பிடித்து வருகிறார்களோ அவர்களுக்கு ஒளி யும் வெற்றியும் நிரந்தரப் பாக்கியமும் மன அமைதியும் கிடைக்கும் என்று அல்லாஹ் வாக்குறுதி அளித் துள்ளான். அன்புள்ள முஸ்லிமே! நீங்கள் எந்தப் பிரிவைச் சேர்ந்தவர் என்பதைச் சீர்தூக்கிப் பார்த்துக் கொள்ளுங்கள்.

## தொழுகையும் நாம் செய்யும் சில தவறுகளும்

(1) வேண்மேன்றே தூக்கிக்கொண்டு அல்லது வேலை செய்துகொண்டு தொழுகையை நேரப்படி நிறை வேற்றாமல் பிற்படுத்துவது. எந்தச் சூழ்நிலையானாலும் தொழுகையை அதற்கரிய நேரத்தில் நிறைவேற்றக் கூடியவர்தான் உண்மையான முஸ்லிம். மறதி, தூக்கம் போன்ற மார்க்கரீதியான தக்க காரணம் இருந்தாலே தவிர!

(2) ஜமாஅத்துன் சேர்ந்து தொழமால் சோம்பலாக விட்டுவிடுவது. பாங்கோசையைக் கேட்டவுடன் எல்லா வேலைகளையும் விட்டு விட்டு இறையில்லம் நோக்கி விரைபவனே உண்மை முஸ்லிம் ஆவார்.

(3) தொழுகையின் அடிப்படை அம்சங்களை அவசர கோலத்தில் நிறைவேற்றுவது.

## நபிவழிப்படி தொழுங்கள்

உண்மையான முஸ்லிம் என்பவர், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் எவ்வாறு கட்டளையிட்டார் களோ அவ்வாறே தொழுகையை நிறைவேற்றுபவர்தான். பித்அத் எனும் நூதன அனுஷ்டானங்களுடன் நிறைவேற்றப் படுகிற அல்லது ஷரீஅத்தின் நெறிப்படியிலான சுத்தத்தை மேற்கொள்ளாமல் தொழும் தொழுகையை நிச்சயமாக அல்லாஹ் ஏற்றுக்கொள்ள மாட்டான். நபி (ஸல்) அவர்கள் எவ்வாறு தொழுகையை நிறைவேற்றினார்கள் என்கிற விவரம் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களில் பதிவாகியுள்ளது. அதனை சுருக்கமாக உங்களுக்கு நாம் விளக்கிக் கூறுகிறோம்.

## தொழுகை முறை

(1) கிப்லா அதாவது மக்காவிலுள்ள கஃபாவின் திவையை முன்னோக்கி நல்லுங்கள். இரு காது களுக்கு நேராக கைகளை உயர்த்தியவாறு **அல்லாஹு அக்பர்** என்று சொல்லுங்கள். பிறகு வலது கையை இடது கையின் மீது வைத்து நெஞ்சின் மேல் கட்டிக்கொள்ளுங்கள். பிறகு இந்த ஆரம்ப துஆவை ஓதுங்கள்:

ஸு ப்ஹான(க்) கல் லாஹு ம்ம வபி ஹம் தி(க்)க, வதபார(க்)கஸ்மு(க்)க வதஆலா ஜத்து(க்)க வ லா இலாஹ ஃகை ருக் - பிறகு ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதுங்கள். அது வருமாறு:

### ஃபாத்திஹா அத்தியாயம்

அஊதுபில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம், பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம், பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம், அல் ஹம்து லில்லாஹி, றப்பில் ஆலமீன் ஆர் ரஹ்மானிர் ரஹீம், மாலி(க்)கி யவ்மித்தீன், இய்யா(க்)க நஃபுது வ இய்யா(க்)க நஸ்தஈன் இஹ்தினஸ் ஸிறாத்(த்)தல் முஸ்தQகீம் ஸிறா(த்)த்தல்லதீன அன்அம் (த்)த அலைஹிம், ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம், வலழ் ழால்லீன்

**பிறகு குல்ஹு ல்லாஹு அஹது போன்ற இலகுவான குர்ஆன் அத்தியாத்தை ஓதிக்கொள்ளுங்கள். அது வருமாறு:**

**குல்ஹு வல்லாஹு அஹத், அல்லாஹு ஸ் ஸமத், லம் யலித் வலம் யூலத் வலம் யகு(ன்ல்)லஹு குஃப் வன் அஹத்**

(2) பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லிக்கொண்டு ருகூவு செய்யுங்கள். அதில் சுப்ஹான றப்பியல் அழீம் என்று கூறுங்கள். இதை பல தடவை ஓதுவது சிறப்பு.

(3) பிறகு ருகூவுவில் இருந்து - ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா, றப்பனா வலக்கல் ஹம்த் என்று கூறிய வாறு தலையை உயர்த்துங்கள்.

(4) பிறகு அல்லாஹு அக்பர் என்று கூறியவாறு சுஜூ து செய்யக் குனியுங்கள். சுஜூ தில் சுப்ஹான றப்பி யல் அஃலா என்று கூறுங்கள். இதை பல தடவை சொல்வது சிறப்பு.

(5) பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லியவாறு அமருங்கள். அதில் றப்பிஃக்-ஃபிர் லீ என்று சொல்லுங் கள். இதை பல தடவை ஓதுவது சிறப்பு.

(6) பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லியவாறு சுஜூ து செய்யுங்கள்.அதில் சுப்ஹான றப்பியல் அஃலா என்று கூறுங்கள். இதை பல தடவை சொல்வது சிறப்பு.

(7) அல்லாஹு அக்பர் என்று கூறியவாறு இரண்டாவது ரக்அத் செய்ய எழுந்து நில்லுங்கள். முதல் ரக்அத் தில் செய்தவாறு செய்யுங்கள்.

(8) இரண்டாவது ரக்அத்தில் சுஜூ து செய்து முடித்தால் அல்லாஹு அக்பர் என்று கூறிக்கொண்டு அமருங் கள். முதல் அத்தஹிய்யாத்தை ஓதுங்கள். அது வருமாறு:

التحيات لله والصلوات والطيبات ، السلام عليك أيها النبي ورحمة الله و بركاته ، السلام علينا و على عباد الله الصالحين ،

اشهد أن لا اله إلا الله واشهد أن محمدا عبده و رسوله

அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ்ஸலவாத்து வத் தய்யிபாத்து, அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந் நபிய்யு வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு , அஸ்ஸலாமு அலைனா வலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன், அஷ்ஹது அ(ன்)லாஇலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹ்

(9) இரண்டு ரக்அத் தொழுகையாக இருந்தால் கடைசி அத்தஹிய்யாத்தை நிறைவுபடுத்துங்கள். அதன் விளக்கம் அடுத்து வருகிறது. பிறகு ஸலாம் கொடுங்கள். இரண்டு ரக்அத்துக்கு அதிகமாக இருந்தால் முதல் அத்தஹிய்யாத்தை ஓதிய பிறகு எழுந்திருங்கள். இதற்கு முன்பு செய்தபடி செய்யுங்கள்.

(10) தொழுகையின் கடைசியில் - அல்லாஹு அக்பர் என்று சொல்லி அமருங்கள். முதல் அத்தஹிய்யாத்தை ஓதுங்கள். பிறகு இரண்டாவது அத்தஹிய்யாத்தை ஓதுங்கள். பிறகு இந்த ஸலவாத்தை ஓதுங்கள்:

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதுன்ம் மஜீத், அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதுன்ம் மஜீத்

(11) இவ்வாறு ஓதி முடித்ததும் இந்த துஆவை ஓதுங்கள்: அல்லாஹும்ம றப்பனா ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனத்த(ன்வ்) வஃபில் ஆகிறத்தி ஹஸனத்த(ன்வ்) வகினா அதாபன் நார், அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மின் அதாபி ஜஹன்னம வமின் அதாபில் கப்றி வமின் ஃபித்னத்தில் மஹ்யா வல் மமாத்தி வமின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால்

(12) பிறகு இடது பக்கம் முகத்தை திருப்பி அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ் என்று ஸலாம் கொடுங்கள். பிறகு இடத்து பக்கம் முகத்தைத் திருப்பி அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ என்று ஸலாம் கொடுங்கள். இத்துடன் தொழுகை நிறைவடைந்தது.

## தொழுகைக்குப் பிறகு ஓதும் திக்ர்

- **அஸ்தஃக் ஃபிருல்லாஹ் (3 தடவை) அல்லாஹும்ம அன்த்தஸ்ஸலாம், வமின்க்கஸ் ஸலாம், தபாரக்த்த யா தல் ஜலாலி வல் இக்ராம்,**
- **லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்கலஹு லஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷையின் கதீர், அல்லாஹும்ம லா மானிஅ லிமா அஃத்த்தைத்த வலா முஃத்திய லிமா மனஅ்த்த, வலா யன்ஃபவு தல் ஜத்து மின்க்கல் ஜத்**
- **ஸுப்ஹானல்லாஹி வல் ஹம்து லில்லாஹி வல்லாஹு அக்கபர் (33 தடவை) லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்கலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்**
- ஆயத்துல் குர்ஸி, குல்ஹுல்லாஹு அஹத், குல்அஊது பிறப்பில் ஃபலக், குல் அஊது பிறப்பிந் நாஸ் ஆகியவற்றை ஓதுவது